

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்துத்

திங்கள் வெளியீடு




## இருபத்துமூன்றாம் துணர்

சருவசித்து—1947-48







தொழிற்றொண்டர்: அ. கணபதி

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தில் பதிப்பிக்கப் பெற்றது.



# தமிழ்ப் பொழில்

## இருபத்துமூன்றும் துணர்—உள்ளுறை.

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| | | |
|---|---|---|
| துணர் உ௩. | சருவசித்து—சித்திரை, வைகாசி 1947—ஏப்பிரல், மே | மலர் க, உ |

தமிழ்ப் பொழிலின் இருபத்து மூன்ருவது துணர் தோன்றுகின்றது. சித்திரைத் தொடக்கத்தில் வெளிவர வேண்டியது, நான்கு திங்கள் தாழ்த்து, ஆவணித் தொடக்கத்தில் வெளிவருகின்றது. சென்ற விய, மார்கழி மலரில் தெரிவித்துக் கொண்டவாறு தாள் கிடைக்காமையே இத் தாழ்ச்சிக்குக் காரணமாம். பொழிலன்பர்கள் பொறுத் தருள்வார்களாக.

இனி ஒவ்வொரு திங்களும் இவ்விரண்டு மலர்களாக மலர்ந்து பருவத்தோ டொட்டிப் பூக்கத்தொடங்க வெனத் திருவருட் டுணையையும் தமிழ்த் தாயின் தண்ணளியையும் வேண்டுகின்ருேம்.

* * * * *

இவ் வாண்டு யாவருக்கும் சிறப்பாகவும் மகிழ்ச்சியாகவும் தொடங்கியது. பொழிலன்பர்க்கு எம் மகிழ்ச்சியுரையை எம் மனமார வெளியிட்டோம். பின்னர், அருட்டிரு. விபுலானந்த அடிகளார் யாழ்நூல் அரங்கேறிப், பொதுவாகத் தமிழுலகத்திற்கும், சிறப்பாக இசை யுலகத்திற்கும் பேருவகை யளித்தது. அரும் பெறல் நிதியம் பெற்றுச் செந்தமிழ்த் தொண்டரெல்லாம் பூரிப்புற்றனர். பின்னும் பல அரும் பொருள்களை அவர்களிடம் எதிர் பார்த்திருந்தனர்.

* * * * *

எந்த நற் செயலும் இடையூறின்றி நிறைவுறுவதில்லை. நேரும் இடையூறுகளின் அளவு கொண்டு நாம் மேற் கொள்ளும் செயல்களின் சிறப்பும் நலமும் அளந்தறியப் பெறலாம். யாழ் நூலின் பெருஞ் சிறப்பினுலும் அதன் வெளியீட்டினுலும் பேருவகையுற்ற தமிழ்ப் பெருமக்கள் அவ்வளவுக் கவ்வளவு பெருந்துயருற்றனர். பேருவகை தந்த யாழ் நூல் ஆசிரியர் அருட்டிரு. விபுலாநந்த அடிகளார் நம்மை விட்டுப் பிரிந்த கொடுஞ் செய்திப் பேரிடி, தமிழுரை யெல்லாம் துயர்ப் பெருங் கடலில் தள்ளியது.

* * * * *

யாழ்நூலாசிரியர்

# அருட்டிரு விபுலாநந்த அடிகளார் பிரிவு.

அண்மையில் இசைத் தமிழ் நூலாகிய யாழ் நூலை நிறைவு செய்து அரங்கேற்றி யருளிய யாழ்நூல் ஆசிரியரும், இலங்கைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியரும் ஆகிய அருட்டிரு விபுலாநந்த அடிகளா ரவர்கள், கொழும்பு நகரத்திலே, 1947, ஜூலை, 19, சனிக் கிழமை யிரவு ஒன்றே கால் மணிக்கு இறைவன் திருவருளிற் கலந்து மறைந்தார்கள் என்னுந் துயரச்செய்தி தமிழகத்தா ருள்ளத்திற்பேரிடி வீழ்ந்த தெனப் பெருங் கலக்கத்தைத் தருகின்றது. சென்ற வைகாசித் திங்களில், ஆளுடைய பிள்ளையார் திருநாளிலே (5, 6,—6—47) திருக்கொள்ளம்பூதூர்த் திருக்கோயிலில் நிகழ்ந்த யாழ்நூல் அரங்கேற்று விழாவில் பெருமகிழ்ச்சியிற் றிளைத்த யாம், தமிழர்க்கு எய்ப்பில் வைப்பாகிய அடிகளாரது பெரும் புலமையினைக் கொண்டு தமிழகத்தார் இன்னும் பல புது நூல்களைப் பெற்று மகிழ்வார்கள் எனவும், பண்டைத் தமிழர் இசை நலம், உலகெலாம் பரவ அடிகள் யாழ்நூலை ஆங்கில மொழியில் இயற்றி யளிப்பார்கள் எனவும் எதிர்பார்த்திருந்தோமே. எமது எண்ணம் சிதறுண்டு போகும் வண்ணம் இவ்வளவு விரைவில் அடிகளார் எம்மைப் பிரியுந் தீவினையுடைய ராயினேம் என்பதன்றி, வேறு என்ன சொல்ல இருக்கிறது. உடைந்த நெஞ்சினே மாகிய யாம், எமது துயரத்தினை இனைத்தென வெளியிடவும் இயலாதிருக்கின்றேம்.

நம் சங்கத்தைப் போற்றி வளர்த்த செந் தமிழ்ப் புரவலர், தமிழவேள் அவர்கள் வடநாட்டில், அயோத்தி நகரின் அருகே இறையருளிற் கலந்து மறைந்த துன்ப நிகழ்ச்சியைக் கேட்டு உளங் கலங்கிய விபுலாநந்த அடிகளார், தம் அருட் புலமை நீர் பெய்து, நம்மனோரது ஆருத் துயரினை அவித்தனர். இசைத் தமிழ் நூலை விரைவி லியற்றி யளித்தல் வேண்டுமென அடிக்கடி தமிழவே ளவர்கள் வேண்டியதற் கிணங்க நம் அடிகளாரும், தமிழவேள் அவர்களின் அன்பு நிலையமாகிய கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின்கண் அமர்ந்து, யாழ் நூலின் முதற் பகுதியை எழுதினார்கள். போர்க் காலத்தில், கல்கத்தா நகரத்தில் தங்கிய அடிகளாரது உள்ளம், பண்டைத் தமிழரது அருங்கலை நிதிய மாகிய இசைச் செல்வத்தை எப்படியாவது தமிழ் நாட்டார்க்கும், உலகத்தார்க்கும் வெளிப்படுத்திவிட வேண்டும் என்ற நினைவிலேயே தோய்ந்திருந்தது. அந்நாளில் அடிகளார் கருத்தினைக் குறிப்பினு லுணர்ந்து, அதனை யுருவாக்கித் தர முன்வந்த பெரியார், திருக்கொள்ளம்பூதூர்த்

திருப்பணிச் செல்வரும், நம் சங்கப்பேரன்பரும், புரவலரும் ஆகிய கோனூர் சமீன்தார் திரு. பெ. ராம. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்க ளாவர். இவர்களது தூண்டுதலினுற் ருன் அடிகளார் கல்கத்தாவினின்றும் மீண்டு, தமிழ் நாட்டிற்கு வந்து, புதுக்கோட்டை 'இராம நிலையம்' என்னும் இவர்தம் இல்லத்தில் தங்கி யாழ் நூலின் பிற்பகுதியினையும் எழுதி முடித்தார்கள்.

யாழ் நூல் எழுதி முடிந்த பின்னரும், அதனை யச்சிடத் தொடங்குதற்குப் பல தடைக ளிருந்தன. ஊணுறக்க மின்றி இவ் வாராய்ச்சியினை நிகழ்த்தித் தளர்ந்த நிலையில் உள்ள அடிகளார் இலங்கைப் பல்கலைக் கழக அலுவல்களையும் மேற்கொண்டு நிகழ்த்தும் கடமை யுடைய ராஞர்கள். வட நாட்டிற்குந் தென் ஞட்டிற்குஞ் சென்று வந்த நலிவால் அவர்களுக்கு நெருப்புக் காய்ச்சல் (Typhoid) உளதா யிற்று. அதனுல் பெரிதும் வருத்த முற்ற அடிகளாரது நல்லுயிர், உடம்பின் அகத்ததோ புறத்ததோ என ஐயுறும் நிலையினை எய்தியது. இந் நிலையில் அடிகளாரைக் கண்டு, வேண்டும் மருத்துவ வசதிகளைச் செய்ய வந்த திருவாளர் சிதம்பரஞ் செட்டியா ரவர்களை நோக்கி, அடிகளார்மெலிந்த குரலிற் கூறிய மொழி நம்மனோர் உள்ளத்தை யுருக்கும் நீர்மையதாம். "யான் இன்னுஞ் சில வாண்டுகள் உயிர் வாழ்தற் குரிய நன் மருந்து யாழ் நூலை யச்சிட்டுப் பார்த்த லொன்றே" என அடிகளார் கூறிய கனிவுரையைக் கேட்ட செட்டியா ரவர்கள் யாழ் நூலை விரைந்து அச்சிடச் செய் தார்கள். அதன்பின் யாழ்நூல் திருத்தப் படிகளை அடிக ளார் பார்வைக்கு அனுப்பிவந்தோம். அவற்றைக் கண்டு மகிழ்ந்த அடிகளாரும் நோய் நீங்கி நலம் பெற்ருர்கள். என்ருலும், அவர்கள் தமிழாராய்ச்சியில் வைத்த பேரார் வத்தால் தம் முடம்பினை உரிய வகையிற் பேணிக்கொள்ள வும் மறந்தார்கள். அதனுல் அண்மையில் ஓராண்டுக்குள் பாரிச வாயு என்னும் நோய் அவர்க ளுடம்பைப் பற்றியது. யாழ்நூ லரங்கேற்றத்தை விரைவில் நிகழ்த்தித் தாம் கண்ட அரிய வுண்மைகளைத் தமிழறிஞர்களுக்கு வெளிப்படுத்தி விட வேண்டு மென்னும் ஆர்வம் அடிகளா ருள்ளத்திற் பெருகியது. அந் நிலையில் அவர்களை 'இராம நிலையத்'தில் அமர்த்தித் தக்க மருத்துவர்களை உடனிருக்கச் செய்து, நன் மருந்துகளைத் தந்து, அடிகளார்க்கு வேண்டும் எல்லா வசதிகளையும் பேரன்பர் செட்டியா ரவர்கள் விருப்புடன் செய் தார்கள். எப்படியாவது அடிகளார் முழு நலம் பெற்றுத் தமிழ் வளம் பெற்ருல், அதுவே தாம் பெறும் பேரின்பமா மெனச் சிதம்பரஞ் செட்டியா ரவர்கள் எண்ணித் தொண்டு

செய்தார்கள். அவர்கள் தொண்டின் பயனாக நம் அடிக ளாரும் உடல் நலம் பெற்று யாழ்நூல் அரங்கேற்று விழா வில் நோய் நீங்கிய பெருமித நிலையில் வீற்றிருந்து, பண் டைத் தமிழர் இசை நலங்களை எடுத்துரைத்து நம் தமிழ் மக்களுக்குத் தமிழ்ப் பணியில் புதிய எழுச்சியினையும் ஊக் கத்தினையுந் தந்தருளினார்கள். கரிய திருமேனியில் வெளிய திருநீறணிந்து, காவி யுடையுடன் அருள் பொழியுந் திரு முகத்தில் பழந் தமிழர் புலமை வீறு பொலிய நம் அடிக ளார் அரங்கேற்று மண்டபத்தில் வீற்றிருந்த தோற்றம் இன்றும் எம் கண்முன் தோன்றுகின்றது. அந்தோ! அவர்களால் இனி யுளவாகும் பெரு நலங்களை யெல்லாம் தமிழகம் பெறாது வருந்த அடிகளார் திருக்கயிலைப் பெரு மான் திருவடிகளில் இரண்டறக் கலந் தின்புறுகின்றார்கள். ஐயகோ! நம்மாற் செயற்பாலது யாதுளது? இவ் வருட் பெரியாரின் பெரும் பிரிவினால் தமிழகத்தார்க் குளதாகிய ஈடுசெய்ய முடியாத பேரிழப்பினையோ, அன்றி, இவ் வடிக ளாரைத் தோற்றுவித்துப் புகழ் படைத்த இலங்கை நாட் டவர் வருத்தத்தினையே, “இராம நிலையம் என் தாய் வீடு” என அடிகளாராற் போற்றப் பெற்ற புகழுக்கு உரிய கோனார் சமீன்தா ரவர்களின் அளவிலாத் துயரத்தினையோ அடிகளாருடன் நெருங்கிப் பழகிய மாணவரும் பிற அன் பர்களும் அடையும் வருத்தத்தினையோ, எல்லா வகை யாலும் பணிசெய்வித்துப் பயன் கொண்ட நம் சங்கத்தின் ஆறாத் துயரினையோ இவற்றுள் எதனை யெழுதுவது என ஒன்றும் புரியாது உளங் கவல்கின்றேம்.

ஈழ நாட்டில் தமி ழிள ஞாயிறாக இற்றைக்கு ஐம்பத் தைந் தாண்டுகளின் முன் தோன்றி ஆங்கிலமும் அருந் தமிழும் திருத்த முறப் பயின்று, எண் ணூல், பூத நூல், வேதி நூல் முதலிய பல கலையுந் தேர்ந்து, இலண்டன் பல் கலைக் கழகப் பி. எஸ். ஸி. பட்டமும், மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதப் பட்டமும் பெற்றுப், பண்டித மயில் வாகனனார் என்னும் பெயருடன் தொல்பெருஞ் சிறப்பின் நல்லாசிரியராய்த் தொண் டாற்றிப், பின்னர், அருட்டிரு. இராமகிருட்டின தேவர் அடியார் குழுவிற் சேர்ந்து துறவு நிலை யெய்தி, விபுலாநந்த அடிகளார் என்னுந் திருப்பெய ருடன், இமயம் முதல் ஈழம் வரை தமிழ்த் தொண்டும் சம யத் தொண்டும் செய்தருளிய வித்தகச் செல்வர் நம் அருண்மிகு அடிகளா ராவர்.

‘மன்னவர் திருவும் நந்தம் வண்டமிழ்த் திருவும் ஓங்க, இந்நிலத் தினிது போந்த இன்றமிழ் இளங்கோ’ என்னுஞ்

சேர முனிவரே இவ்வடிகளாய் வந்தருளினா ரென்னும்படி, முத்தமிழ்க் காப்பிய மாகிய சிலப்பதிகாரத்திற் பொதிந்து வைத்த பண்டைத் தமிழிசை நலங்களை யெல்லாம் முன் தாம் வைத்த பொருளைப் பிழையாது மீட்டும் விரைந் தெடுத்துத் தருவார் போன்று, தம் நுண்மாண் நுழை புல னென்னுங் கையால் எடுத்து வழங்கிய பெருமை, யாழ் நூலாசிரிய ராகிய நம் அடிகளா ரொருவர்க்கே யுரிய சிறப் பிய லாகும்.

திருவாளன் எழுந்தருளிய திருக்கயிலையை யடைந்து, அம்மை யப்பராய் அருள் சுரக்கும் இறைவரை உருவாரப் பணிந்து, பெருமகிழ்ச்சி யுற்றுத், திருநாவுக்கரசடிகளா ரைப் போன்று, 'மன்னுதீந் தமிழ் புவியின்மேற் பின்னரும் வழுத்த' அப் பெருமான்பால் விடைபெற்றுப் பிரியாது பிரிந்த அடிகளா ரவர்கள் தமிழ் நாடு போந்து தமிழ்த் தொண்டாற்றி, 'நம் பணி நிறைவேறியது; இனி யிங்கிருப் பது முறையன்று' எனக் கருதுவார் போன்று, தாம் மேற் கொண்ட யாழ்நூ லலுவல் நிறைவேறிய அவ்வளவிலேயே நம்மை யெல்லாம் விட்டுப் பிரிந்தார்கள். இசை யுருவாய் நின்ற பெருமான் இணை யடியில் இன்புற்றிருக்கும் விபுலா நந்த அடிகளாரவர்கள், தம் உள்ளத்திற் கொண்ட தமிழ் நலங்க ளெல்லாம் தமிழ ருள்ளத்தில் நன்கு பதியும்படி உள்நின் றுணர்த்திப் பழந் தமிழ் யாழ்க் கருவி உரு நலம் பெற்று இசை பரப்பும் நல்லுணர்வினைக் கிளர்ந் தெழச் செய்தருள்வார்களாக என அவர்கள் திருவடிகளை உளங் கசிந்து போற்றுகின்றோம். அவர்கள் உருப்படுத்திக் காட் டிய முளரி யாழ், செம்முறைக் கேள்வி யெனும் சகோட யாழ் சுருதி வீணை என்னுங் கருவிகளில் பண்டைத் தமிழர் இசை யுருக்களை இசைத்துத் தமிழிசை பரப்பும் நற்றொண் டில் இயற் புலவர்களும், இசை புலவர்களும் தமிழ்ச் செல் வர்களும் ஈடுபட் டுழைத்தல் வேண்டும். அங்ஙனம் அடிக ளார் காட்டியதொண்டின் நெறியினைப் பின்பற்றிச் செல்லுதலே தமிழ் மக்கள் யாழ்நூ லாசிரியர்க்குச் செய் யும் வழிபாடும் நன்றி யுணர்வு மாகும். அடிகளார் பிரிவி னால் உள முடைந்து வருந்தும் தமிழர்களின் ஆருத் துயரத் தினை ஆற்றும் வகையில் திருவருட் செல்வ ராகிய அடிக ளாரின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பினை இவண் சுருக்க மாகத் தருகின்றோம். தமிழகம் செந்தமிழ் முனிவ ராகிய தமிழ்ப் பேராசிரியரின் பண்பு பாராட்டிப் புலமை நலம் பெறுவதாகுக.

# முத்தமிழ்ப் பெரும்புலவர் மறைந்தார்.

வித்துவான் பண்டிதர் திரு. கா. பொ. இரத்தினம், B.A. (Hons), B. O. L.
விரிவுரையாளர், அரசினர் ஆங்கில ஆசிரியர் கலாசாலை, கொழும்பு

அருட்டிரு விபுலானந்த அடிகளாரை இழந்து தமிழுலகம் துயரக் கடலில் ஆழ்ந்து கிடக்கிறது. முத்தமிழ்ப் பெரும் புலவரை—பல்கலைச் செல்வரை—துறவொழுக்கத்தா லுயர்ந்த பெரியாரை—தமிழ்ப் பேராசிரியரை—தமிழ்த் தாயின் தவப் புதல்வரை—தமிழுலகின் இளஞாயிற்றை—தமிழ்ப் புலவர் மரபைத் துலக்கிய தண்மதியை—சொற் பெருங் கொண்டலை—தமிழ் மக்களின் அறிவுக் களஞ்சியத்தை..............இழந்தோம் இழந்தோம் என்று பலப் பல எண்ணித் தமிழன்பர்கள் வருந்துகிறார்கள். உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதலன்றோ புலவர் தொழில்!

'சங்கத் தமிழ் மூன்றுந்தா' என்று ஔவையார் முத்தமிழினையும் அறிய விரும்பி விநாயகரை வேண்டினார். 'முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவிகள்' எனக் கம்பர் புலவர்களை உபசரித்தார். 'முத்தமிழ்க் கவி' என்று பட்டம் பெற்றவர்களுஞ் சிலர் பண்டைக் காலத்திலிருந்தனர் என்பர். எனினும் முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தை இயற்றித் தந்த இளங்கோ அடிகளின் பின் முத்தமிழிலும் புலமை படைத்து முத்தமிழுக்குந் தொண்டு செய்தவர் விபுலாநந்த அடிகளார் ஒருவரே யாவர். முத்தமிழில் மாத்திரமன்றி ஆங்கிலம், ஆரியம் முதலிய மொழிகளிலும் கணித நூல், வேதி நூல், பூத நூல் முதலிய கலைகளிலும் நிரம்பிய அறிவுடைய கலைச் செல்வராகவும் அடிகளார் விளங்கினார்கள்.

**தமக்கென வாழாது தமிழுக்கென வாழுதற்கே** அடிகளார் துறவொழுக்கத்தை மேற்கொண்டார் என்று கூறத் தக்கதாக அவர் தமிழ் மொழிக்குப் பல துறைகளிலுந் தொண்டாற்றி யுள்ளர். தமிழ்ப் புலவர்களிடத்தும், தமிழ்ப் புலவர் மரபிலும் அவர்கள் அளவிறந்த அபிமான முடையவர்களாயிருந்தார் என்பதை அவர்களோடு நன்கு பழகியவர்கள் யாவரும் அறிவர். புதுமை புதுமை என்றுரவாரித்தும், பழமையை இகழவும் முற்படும் மக்கள் மலிந்த இக்காலத்திலே அடிகளார் தாமியற்றிய **யாழ்**நூலைப் பண்டைப் புலவர் மரபைத் தழுவியே அரங்கேற்றினார்கள். அன்றியும், **யாழ்**நூலின் கடவுள் வாழ்த்து, இயல் வகுப்பு முதலியனவும் பழைய மரபைத் தழுவியே செய்யப் பட்டுள்ளன.

அடிகளார் பதினன்கு வருட காலமாக அரிதின் முயன்றுழைத்து உருவாக்கிய இந்த **யாழ் நூலினைத்** திருக்கொள்

எம்பூதுார் திருக்கோயிலிலே ஆளுடைய பிள்ளையார் திருமுன், பல பேரறிஞர் கூடிய சபையில் சென்ற வைகாசி மாதம் 22, 23 ஆம் நாட்களில் அரங்கேற்றினார்கள். இந்நூலை எழுதி முடிப்பதற்கு அவர்கள் செய்த முயற்சிகளை எடுத்தெழுத முடியாது. அடிகளாரிடம் யான் செல்லும் பொழுதெல்லாம் யாழ்நூலின் பல பகுதிகளையும் எடுத்துரைத்து விளக்கிக் காட்டுவார்கள். கணித நூல் வாயிலாகத் தாங் கண்ட முடிபுகளைக் கணித்துப் பெறுமாறு கூறுவார்கள். இதனால் யாழ்நூலினை எழுதி முடிப்பதற்கு அவர்கள் ஆராய்ச்சியின் அருமை பெருமைகளை நேரில் அறிவதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைத்தது.

முத்தமிழ்ப் புலமை மாத்திரமன்றிக், கணித நூற் புலமையும் நுண்மாணுழை புலமும், அருட்டிறனும், விடா முயற்சியுமின்றி இந்த யாழ்நூலினை எழுதி முடிக்க இயலாது என்பதை இந்நூலே நன்கு கூறுந்தகையது. ஆளுடைய பிள்ளையார் எலும்பைப் பெண்ணுரு வாக்கியது போன்றே அடிகளாரும் சிலப்பதிகாரம் முதலிய நூல்களிலிருந்த இசைத்தமிழணங்கின் எலும்புகளை ஒன்று சேர்த்து நல்லுடலும் புத்துயிரும்அளித்திருக்கிறார்கள். தமிழ் மக்கள் என்றும் நினைந்து நினைந்து வியக்கத் தக்க முறையில் இந்நூல் எழுதப்பட்டுளது. இந்நூலினை அரங்கேற்றி இரு மாதங்கள் கூடக் கழியவில்லை. இதற்கிடையில் அடிகளார் மறைந்து விட்டார்கள். இதனை நோக்கும் பொழுது இப்பெருநூலைச் செய்து தந்து போவதற்கே அடிகளார் அவதரித்தார்கள் என்று எண்ணலாமன்றோ!

யாழ் நூலினை அரங்கேற்றி முடித்தபின் 30-6-47தேதியிலேயே அடிகளார் கொழும்புக்கு வந்தார்கள். வந்தபின் 6—7—47ம் தெய்தியில் அவரைக்கண்டேன். யாழ்நூலையும் அரங்கேற்றத்தையும் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். யாழ்நூலை அரங்கேற்றுவதற்கு வேண்டிய முயற்சிகளிலீடுபட்டமையாலும், தென்னிந்தியாவிலிருந்து கொழும்புக்கு வந்த களைப்பினாலும் அடிகளாருடைய உடல் சிறிது தளர்ந்திருந்தது. உடல் வாடியிருந்தாலும் அவர்களுடைய உள்ளஞ் சிறிதும் சோர்வடையவில்லை. யாழ்நூலினை ஆங்கிலத்திலும் எழுதி வெளியிடவும், சைவ சித்தாந்த சாத்திரங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கவும் செய்யுள் பல இயற்றவும் உடனேயே தொடங்க வேண்டுமென்று எண்ணினார்கள். தமதுடல் நலத்தைச் சிறிதும் பொருட்படுத்தாது தமிழுக்கு இன்னும் பல தொண்டுகள் செய்ய வேண்டுமென்று அவர் ஆசைப்பட்டதைக் கண்டு நான் திகைத்துவிட்டேன். அடுத்த ஞாயிற்றுக்கிழமை சந்திப்

போமென்றுஅடிகளார்விடைகொடுத்தார்கள். 'ஆம்'என்று புறப்பட்டேன். அடுத்த ஞாயிற்றுக்கிழமை (13—7—47) அவர்களைக் காணச் சென்றேன். அவர்கள் நோய்வாய்ப் பட்டிருந்தார்கள். 'விரைவில் சுக மடைவார்' என்று அவர்களுடைய அன்புக் குரிய மாணவர் வித்துவான் திரு. க. வெள்ளைவாரண முதலியாருக்கும் எழுதினேன். ஆனால் அடுத்த ஞாயிற்றுக்கிழமை (20-7-47) அடிகளார் இவ்வுலக வாழ்வை நீத்தார்கள். 'ஞாயிற்றுக்கிழமை சந்திப்போம்' எனுஞ் சொற்கள் இப்பொழுதும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

நம் மெல்லோரையும் விட்டுப் பிரிந்து அடிகளார் போய்விட்டா ரெனினும், அவர் செய்த தொண்டுகளிலும், இயற்றிய நூல்களிலும், எழுதிய கட்டுரைகளிலும் பாடிய பாட்டுக்களிலும் அவரை அவருடைய தூய உள்ளம், விழுமிய புலமை, பரந்தபேரறிவு முதலியவற்றை நாம் எப் பொழுதுங் காணலாம்.

'கன்னு பின்னு' என்றெல்லாங் கவி கட்டுவார் பெருகும் இக்காலத்தில் அடிகளாருடைய பாட்டுக்கள் செஞ் சொற் கவி யின்பம் இத்தகையது என்பதை எடுத்துக் காட்டுகின்றன.

"செவ்விய மதுரஞ் சேர்ந்தன பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞராக" அவர்

விளங்குகிறுர் என்பதை நெஞ்சை யள்ளும் அவருடைய பாட்டுக்கள் யாவும் புலப்படுத்துகின்றன. ஈசனுவக்கும் இன் மலர்களை * யாவர் தாம் உவக்கார்? இந்த இன்மலர் களி லீடுபட்டு அடிகளாருடைய கவிகளை யெல்லாந் தொகுத்து வெளியிட விரும்பினேன். என் விருப்பத்தை அடிகளாருக்குந் தெரிவித்தேன். இன்னும் பல செய்யுள் களை இயற்றவேண்டு மென்று அவர்கள் எண்ணியிருந்த தால் "எனது செய்யுட்களைத் தொகுக்கும் முயற்சியைச் சில்லாண்டு கழித்துச் செய்வீர்களாக" என 1940-ல் இம யத்திலிருந் தெழுதினுர்கள். அவர்கள் உயிருடன் இருந்த காலத்தில் அவற்றை யெல்லாந் தொகுத்து வெளிப்படுத்த முடியாது போய்விட்டதை நினைக்க உள்ளந் துடிக்கிறது. அவர்கள் பிரிந்த இவ்வருடம் முடிவதற்கு முன்னுதல் அவற்றைத் தொகுத்து **ஈசனுவக்கும் இன்மலர்கள்** எனும் பெயருடன் வெளிப்படுத்த எண்ணி முயல்கிறேன்.

---

* பிறிதோரிடத்திற் காண்க.

# திருக்கோளிலிக் கல்வெட்டுக்கள்

வித்துவான். வை. சுந்தரேச வாண்டையார்.

---

## முன்னுரை.

திருக் கோளிலி என்பது சோழ நாட்டுத் தேவாரம் பெற்ற தலங்களுள் ஒன்றாகும். இவ்வூர் இக்காலம் திருக்குவளை என்று வழங்கப் பெறுகின்றது. இது தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானது. இக்கோயில் கருப்ப இல்லினது மேற்குப் புறச் சுவரின் நடுப் பகுதியில் திருமாலின் படிமம் நின்ற திருக் கோலத்துடன் வைக்கப் பெற்றுள்ளது. அர்த்த மண்டபத்து வாசல் அடியிலுள்ள வாயிற் காவலாளர்கள் (Door Keepeers) இருவர்களுக்கும் இரண்டு இரண்டு கைகள் இருக்கின்றன. இவைகளால் இக்கோயில் பல்லவரால் கட்டப்பெற்ற பழம் பெருமை வாய்ந்தது என்று அறியக் கிடக்கின்றது.

இக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. அவைகள் எல்லாம் பிற்காலத்துச் சோழ பாண்டியர் காலத்தியனவாகும். கல்வெட்டுத் துறையாளர் அவைகளை இதுகாறும் படியெடுத்துச் சென்றிலர். ஞாயிற்றின் வெப்பத்தால் கல்வெட்டுக்களுள் சில சிதைந்து விட்டன. எஞ்சியவைகளையாவது வெளியிட வேண்டுமென்ற தருமபுர ஆதீனத்து மகா சந்நிதானத்தின் திருவுள்ளப் பாங்கின்படி 22, 23, 24—2—47 தேதிகளில் அக் கல்வெட்டுக்களை எழுதி வந்தேன். அவை பண்டைக் காலத்தில் நம் தமிழகத்தை ஆண்ட சோழ பாண்டியர்களுடைய வரலாறுகளைப் பற்றியும், திருக்கோயில், ஊர், முதலியவைகளைப் பற்றியும் அறிந்து கோடற்குப் பெரிதும் பயன் படுவனவாய் உள்ளன. ஆதலால் அவைகளின் சுருக்கங்களை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

### கோயில் முதலியவைகளைப் பற்றிய செய்திகள்.

இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் திருக்கோளிலி உடையார், திருக்கோளிலி உடைய நாயனர், என்னும்

திருப்பெயர்களால் அழைக்கப் படுகின்றனர். இக்கோயிலுக்குரிய மரம் தேத்தாவாகும். பிரமதேவர், பஞ்சபாண்டவர், ஆகியோர் வழிபாடாற்றிப் பேறு பெற்றுள்ளனர். இக்கோயில் மகா மண்டபத்தின் துவாரவாசல் தொடங்கிக் கிழைவாசல் அறுதியாகத் திருப்பணி செய்தவர் வடவல்லத்தை இருக்கையாக உடைய இருன்குடியான் இக்திராவதி நல்லூர் உய்ய வந்தான் சீகாழிப் பிள்ளையான ஜயதுங்க பன்மர் ஆவர்.

இவர் திருப்பணி கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டியர் காலத்தில் நடைபெற்றதாகும். வடவல்லம், இருன்குடி, இவ்வூர்கள் திருக்கோளிலிக்கு வடபால் சுமார் நான்கு மைல் தூரத்தில் இன்றும் சிலபேறு உடையனவாய் இருக்கின்றன. இவற்றுள் இருன்குடி என்பது இக்காலம் இறையான்குடி என்று வழங்கப் பெறுகின்றது.

திருக்கோளிலிக்கு வடபால் ஓடும் ஆற்றுக்குச் சந்திர மௌலிப் பேராறு என்று பெயர். இவ்வாறு இக்காலம் சந்திரன் ஆறு என்று வழங்கப் பெறுகின்றது. இவ்வாற்றின் பெருக்கால், இவ்வாற்றின் தென்கரையும், இந்நாயனார் கோயில் வடக்குத் திருவீதியும் அழிந்துள்ளன. இக்கரையையும், வீதியையும் மீளவும் செய்வித்தவன் பாலைக் குறிச்சி உடையான் திருமறைக் காடன் ஆவன்.

பாலைக் குறிச்சி என்னும் ஊர் திருக்கோளிலிக்கு வடக்கே சுமார் ஒன்றரை மைல் தூரத்தில் இருக்கின்றது. இவ்வீதி எடுப்பிக்கப் பெற்ற காலம், கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தர பாண்டிய தேவர் அரியணை ஏறிய எட்டாவது ஆண்டு வைகாசி மாதத்து இருபத்தொன்பதாம் தேதியாகும். அதாவது கி. பி. 1259 ஆம் ஆண்டாகும். எனவே, இக்கோயிலின் வடக்குத் திருவீதி எடுப்பிக்கப் பெற்று இற்றைக்கு 688 ஆண்டுகள் ஆகின்றன. இத்திரு வீதிக்குத் திருமறைக்காடன் திருவீதி என்ற பெயரும் வைக்கப் பெற்றுள்ளது. கிடைத்த கல்வெட்டுக்கள் ஒன்றிலேனும் விடங்கரைப் பற்றிய செய்தி ஒன்றும் புலப்படவில்லை. எனினும் அப்பெருமான் எழுந்தருளி இருக்கும் திருக்கோயில் சோழர் திருப்பணிக்கு உரியதாகும்.

## சோழமன்னர் காலங்களில் அளிக்கப்பெற்ற நிபந்தங்கள்

இக் கோயிலில் முன்னாளில் சிவன் படவரில் ஆலன் எழுந்தருளுவித்த அதிபத்த நாயனார்க்குத் திருப்படி மாற்றுக்கு நாள் ஒன்றுக்கு இருபது நாழி அரிசி அமுதுபடிக்கு அளிக்கக் கடவதாக அவ்வாலனின் சாதியார்கள் ஐயன்னைப் பட்டன் மகன் தாமோதரப்பட்டன் பக்கல் இரண்டாயிரத்து ஒரு நூறு காசைப் பொலிசைக்குக் கொடுத்துள்ளான். (பொலிசை=வட்டி) இந்நிகழ்ச்சி திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராச ராச தேவரின் நான்காம் ஆண்டில் நடைபெற்றுள்ளது.

திருக்கோளிலி உடையார்க்கு, பழையனூர் நாட்டுப் பழையனூர் நாட்டுப் பழையனூர் உடையார் வேதவன முடையான் நொந்தா விளக்கு ஒன்றுக்கு எண்ணெய் உழக்காக நாள் முந்நூற்று அறுபத் தஞ்சுக்கு எண்ணெய் தொண்ணூற்றொரு நாழி உழக்குக்கு நூறு காசை இக்கோயில் முப்பது வட்டத்துக் காணியுடைய சிவப் பிராமணரிடம் கொடுத்துள்ளான். இந்நிபந்தம் அளிக்கப்பெற்ற காலம் திரிபுவனச் சக்கரவர்த்திகள் ராஜாதி ராஜ தேவர்க்கு யாண்டு பத்தாவது மகர நாயிற்றுப் பூர்வ பட்சத்துத் தசமியும் வெள்ளிக்கிழமையும் பெற்ற ரோகணி நாளாகும்.

குலோத்துங்க சோழ தேவரின் இருபதாம் ஆண்டில் கோளிலி உடையார்க்கு, திருச்சாட்டியக்குடி உடையார் திருமடை விளாகத்து இருந்த ஒருவர் திருநுந்தா விளக்கு எரிப்பதற்கு இக்கோயில் முப்பது வட்டத்துக் காணி உடைய சிவப் பிராமணர்களிடம் எண்ணூறு காசைக் கொடுத்துள்ளனர்.

குலோத்துங்க சோழ தேவரின் நான்காம் ஆண்டு கன்னி ஞாயிற்றுப் பூர்வ பட்சத்துத் தசமியும் திங்கள் கிழமையும் பெற்ற சதயத் திருநாளில் இரேசந்திர சோழவளநாட்டு வெண்டாழை வேளூர்க் கூற்றத்திலுள்ள குலோத்துங்க சோழ கச்சிராயர் நாள் ஒன்றிற்கு எண்ணெய் உழக்காக நாள் முந்நூற்றறுபத் தைந்துக்கு வேண்டும் எண்ணெய் தொண்ணூற்றொரு நாழிக்கு உபயமாக நூறு காசைக் கொடுத்துள்ளனர்.

திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராசேந்திர சோழ தேவரின் மூப்பத்தைந்தாம் ஆண்டு மீன நாயற்று அபரபட்சத்துத் தசமியும் திங்கள்கிழமையும் பெற்ற உத்திரட்டாதி நாள் பாலைக் குறிச்சி உடையான் அரையன் திருமறைக் காடுடையான் தன் பிறந்த நாளாகிய கேட்டை நாளில் மாதந்தோறும் கோளிலி உடைய நாயனரைத் திருவீதி திருவுலாச் செய்து அருளவும், அமுதுபடி, சாத்துபடி, திருபள்ளித் தாமம், திருவிளக்கெண்ணெய் உள்ளிட்ட இவை யிற்றுக்கும் ஸ்ரீபாதம் தாங்குவார், திருப்பள்ளித் தொங்கல் எடுக்க வேண்டுவார் ஆகியோர்க்கும் உடலாக அஞ்சரையே மாகாணி நிலத்தைக் கொடுத்துள்ளான்.

இம் மன்னன் காலத்தே பாண்டி குலாசனி வளநாட்டு ஆர்க்காட்டுக் கூற்றத் துடையான் ஒருவன் பிள்ளையார்க்கு நந்தவனத்திற்கு நிலம் விட்டுள்ளான்.

## பாண்டிய மன்னர் காலங்களில் அளிக்கப்பெற்ற நிபந்தங்கள்

வியாபாரிகளில் மாங்குடியான் பிச்சன் கணபதி ஆண்டான் என்பான் இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் கூத்தப்பெருமானுக்கும், அவரது நாச்சியாருக்கும், திருவாதிரைதோறும் திங்கள் திருநாளில் சிறப்பமுது செய்தருளி திருவுலாச் செய்தருளவும், ஆளுடைய பிள்ளையார்க்குத் திருஞான அமுது, திருவுலா, தேவாரம், இவைகள் செய்தருளவும் இடையிலி என்னும் ஊரில் ஒருவேலி மூன்றுமா நிலத்தை இருநூற்று அறுபது பணத்துக்கு வாங்கி இக்கோயில் ஆதி சண்டேசுவர தேவகன்மிகளிடம் கொடுத்துள்ளான்.

இத்தேவ கன்மிகளும் இந்நிலத்தை மூலதனமாகக் கொண்டு இவற்றைச் சந்திர சூரியர் உள்ளவரை நடத்துவதாக இசைவு சீட்டுக் கொடுத்துள்ளனர். இந்நிகழ்ச்சி கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் சுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு பதினெட்டாவதின் எதிராமாண்டு அதாவது (பத்தொன்பதாம் ஆண்டு) ஆடிமாதத்து இருபதாந் தேதியில் நிகழப்பெற்றது.

இப்பாண்டிய மன்னன் காலத்தே வடவல்லத்தை இருக்கையாக உடைய இருன் குடியான் இந்திராவதி நல்லூர் உய்யவந்தான் சீகாழிப் பிள்ளையான ஜயதுங்க மன்மர் இறைவனுக்குச் சிறுகாலை சந்திக்கு ஸ்ரீபலியாக எரிப்பதாக நிச்சயித்த விளக்கு இருபதுக்கு திருக்கோளிலியில் நான்கு மாநிலத்தை முப்பது பணத்துக்கு வாங்கி அளித்துள்ளான்.

இவனே, இம்மன்னனது பதினைந்தாம் ஆண்டில் திருக்கோளிலி உடையார்க்கு, பஞ்சதிரவியம் ஆடி அருளப்பண்ணுவதற்கு நூறுபணத்தைக் கொடுத்துள்ளான்.

சுந்தரமல்லி வளநாட்டுப் பாம்புணிக் கூற்றத்துப் பாம்புணியான தியாகபுறத்துப் பொன்ன நல்லாஞருடையான் சீராம தேவன் திருக்கோளிலி உடையார்க்குச் சந்திராதித்தவரையும் எரிவதற்கு நிச்சயித்த திருநுந்தாவிளக்கு இரண்டினுக்குத் திருவிளக்குப் புறமாக அரையே இரண்டுமா முக்காணி நிலத்தை விட்டுள்ளான். இத்தானம் கோமாறவர்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் குலசேகர தேவரின் முப்பத்தொன்றும் ஆண்டில் நிகழப்பெற்றது.

## ஆராய்ச்சிப் பகுதி

சோழர்கள்:— இத்திருக்கோயிலில் இரண்டாம் இராசராசன் மூன்றுங் குலோத்துங்கன், மூன்றும் இராசராசரின் மூன்றும் இராசேந்திர சோழன், வீரராசேந்திரன் என்னும் சோழமன்னர் காலத்திய கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் இரண்டாம் இராசராசன் காலத்துக் கல்வெட்டு ஒன்றுதான் இருக்கின்றது. அது அதிபத்த நாயனுர்க்கு அளிக்கப்பெற்ற நிபந்தத்தைக் குறிப்பதாகும். அதில் வளநாடு குறிக்கப்படவில்லை. ஏனைய கல்வெட்டுக்களினல்திருக்கோளிலி என்னும் இவ்வூர் இராசேந்திர சோழவளநாட்டு, இடையாள நாட்டு, வெண்டாழை வேளூர்க் கூற்றத்துக்கு உட்பட்டதாய் இருந்தது என்று தெரிய வருகின்றது. வேளூர் என்பது திருவாரூரிலிருந்து திருத்துறைப்பூண்டிக்குப் போகும் பெருவழில் இருக்கின்றது. வேளூர், கீழ்வேளூர் என்னும் பெயருள்ள ஊர்களினின்று வேறு பிரித்துக் காட்டுவதற்கு இது வெண்டாழை வேளூர் என்னும் பெயர் பெற்றிருக்கவேண்டும்.

## பாண்டியர்கள் :—

இத்திருக் கோயிலில் கோச்சடையபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டுக்கள் நான்கும், கோமாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் குலசேகர தேவர் காலத்திய கல்வெட்டு ஒன்றும் ஆக ஐந்து கல்வெட்டுக்கள் இருக்கின்றன. ஈண்டுக் குறிக்கப்பெற்ற சடையபன்மரான சுந்தரபாண்டியனே, சரித்திரத்தில் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் என்று பேசப்படுபவன் ஆவான். இவன் கி. பி. 1251-இல் பட்டம் எய்தினன்.

சண்டேஸ்வரர் கோயிலின் கிழக்குப் புறச் சுவரில் உள்ள இவன் காலத்துக் கல்வெட்டில், இவன் சேரனை வென்ற பாண்டிய தேவன் என்று கூறப்பெறுகின்றான். இவனை அடுத்துப் பட்டம் எய்தியவன் மாறவர்மன் குலசேகர பாண்டியன் ஆவான். இவன் கி. பி. 1268 முதல் 1311 வரை ஆண்டவன். இவ்விரு மன்னர்களுடைய கல்வெட்டுக்களும் இக்கோயிலில் காணப்படுவதால் இவர்கள் காலங்களில் சோழ மன்னர்கள் வலிமை குன்றிப் பாண்டியர்கட்குத் திறை செலுத்தும் நிலையை எய்தி யிருத்தல் வேண்டும்.

பிற செய்திகள் :—

செம்படவர் என்ற சொல்லின் பழைய உருவம் சிவன் படவர் என்பதாகும். இச் செய்தியை அதிபத்த நாயனாருக்கு நிபந்தம் அளிக்கப்பெற்ற கல்வெட்டு உணர்த்துகின்றது. "இந்நாயனார்க்கு இவர் சிறுகாலைச் சன்திக்கு ஸ்ரீபலி அறுதியாக எரிப்பதாக நிச்சயித்த விளக்கு இருபதுக்கு இந்நாயனார் திருநாமத்துக் காணி இறையிலி நிலத்து கோளிலி ஸ்ரீரிலஸ்ரீ மாகேஸ்வர விண்ணகர எம்பெருமான் திருவுடையாட்டத்துக்கு மேற்குத் தடிகல் நிச (நிலம் நாலு மாவுக்கு) பண்டாரத்தாருடன் விலைஅறுத்து பண்டாரத்து ஒடுக்கின பணம் (௬௰) இப்பணம் முப்பதும்"—என்னும் இக்கோயில் கல்வெட்டுப் பகுதியால் திருநாமத்துக்காணி என்பதற்கு, சிவபெருமானுக்குக் கொடுக்கப்பட்ட நிலம் என்றும், திருவிடையாட்டம் என்பதற்கு, திருமாலுககு விடப்பட்ட நிலம் என்றும், பெறப்படுகின்றன.

சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் அகராதியில் (Tamil Lexicon) திருநாமத்துக் காணி=தேவதான நிலம், திருவிடை யாட்டம்=தேவதான மான்யம் என்றே குறிக்கப் பெற்றுள்ளன. கல்வெட்டுக்களை நுணுகி ஆராயின் இவை போன்ற பல அரிய செய்திகள் தோன்றும் என்பது திண்ணம்.

முடிவுரை :—

ஞாயிற்றின் வெப்பத்தால் உதிர்ந்து போன கல்வெட்டுக்களுள் எத்தனை அரிய செய்திகள் மறைபட்டனவோ அறியோம். இவைகளையாவது விரைந்து ஆய்ந்து வெளியிடச் செய்த தருமபுரம் ஆதீனத்தில் அருட் செங்கோல் நடாத்தும் உயர்திரு. மகா சந்நிதானத்திற்குத் தமிழ்நாடு பெரிதும் நன்றி செலுத்தும் கடப்பாடு உடையதாகும்.

# உளநூல்

வித்துவான், M. குஞ்சிதபாத தேசிகர்,
தமிழாசிரியர், உயர்நிலைப்பள்ளி, திருவாரூர்.

---

**மனத்தின் பெயர்களும் ஆட்சியும்**

உள் என்ற முதனிலையிலிருந்து உளம், உள்ளம், உள்ளல், உள்ளுதல் உள்ள, உள்ளி, உள்ளியது, உள்ளுவன், உள்ளான், உள்ளற்க. எனவும், நெஞ்சு என்னும் முதனிலையிலிருந்து நெஞ்சம், நெஞ்சில் நெஞ்சத்தார் எனவும், மனம் என்னும் முதனிலையிலிருந்து மனத்து, மனத்தது, மனக்கு எனவும் திருக்குறள், கலித்தொகை, சிலப்பதிகாரம் முதலிய நூல்களிலே பெரும்பாலும் எடுத்தாளப் பெறுவதுடன் திருக்குறளில் எண் என்ற முதனிலையிலிருந்து எண்ணிய, எண்ணியாங்கு, எண்யார் என இச்சொல் அருகியும் வழங்கியதாகத் தெரிகின்றன.

மேற் கூறியவைகளிலிருந்து உள், எண்ணம், நெஞ்சு, மனம் என்ற சொற்களே பழைய நூல்களிலே மனத்திற்குப் பெயர்களாக எடுத்தாளப் பெற்றுள்ளன என்று தெரிகின்றன.

உள் - கலித்தொகை. (இவை. அ. பதிப்பு) பக்கம் 189, 911.

உளம் - கலித்தொகை. பக்கம் 473
உள்ளம் - திருக்குறள் 1170. கலி. பக்கம் 758.
உள்ளியது - திருக்குறள் 309.
உள்ளா - கலித்தொகை 349, 495.
உள்ளாது - கலி. 480.
உள்ளுதல் - கலி. 114.
நெஞ்சு - குறள் 276. கலி. பக்கம் 117, 181, 852.
சிலப். (உ. வே. சா.) பக்கம் 87.
மனம் - கலி. 183, 282, 706, 902, சிலப் - 391, 409.
மனத்தது - குறள் 278. எண்ணிய, எண்ணியார். குறள் 666.

**மனப் பண்பு**

மனம் தொழிற்படுகின்ற விதத்தினால் குணம் பலவாகத் தோன்றுகின்றன. அவை தெளிவாக இருத்தல், வேகமாக இருத்தல், அறியாதிருத்தல், என மூன்று வகைப் படும். இவற்றை முக்குணமென அறிஞர் எடுத்தாள்வர்.

1. **தெளிவாக இருத்தலாவது** — எடுத்துக் கொண்ட பொருளை மனம் நன்ருக அறிதலோடு இன்பத்தை யுண்டாக்கும் அமைதியுடன் இருக்கும் நிலையாம். இந்நிலையை வட நூலார் சாந்தமென்று வழங்குவர்.

2. **வேகமாக இருத்தலென்பது** மனம் எடுத்துக்கொண்ட தொழிலில் வேகமாக செல்லும் நிலையை. இதனை வட நூலார் இராசதம் என அழைப்பர்.

3. **அறியாதிருத்தலென்பது**—பொருளை நன்ருக அறியாமல் மெதுவாக மனம் தொழிற்படும் நிலையாம். இதனை வடநூல் வல்லார் தாமதம் என்று பகர்வர்.

மேற்கூறிய மூன்று குணங்களும் மக்களுக்கு மாறிக் கொண்டே யிருக்கும் என்ற உண்மை இலக்கணக்கொத்து நூலாசிரியர் "முக்குண வசத்தாள் முறை மறந்து உரைக்கும்" என எடுத்துக் கூறுவதால் இனிதுணரக் கிடக்கின்றது.

குணம், பண்பு, தன்மை என்பன ஒரு பொருட் கிளவி. இனி குணங்களின் பயன் யாது என்பதை ஆராய்வோம்.

**குணங்களின் பயன்.**

சாந்த குணத்திஞல், வாய்மை, மேன்மை, தவம் முதலியன உண்டாகும். இராஜத குணத்திஞல், கல்வி, கேள்வி, ஊக்கம் முதலியன தோன்றும். தாமத குணத்திஞல் நெடுந்துயில், தீயநடை முதலியன உண்டாகும்.

ஒவ்வொருவரிடத்திலும் முக் குணங்களும் மாறிக் கொண்டே யிருந்தபோதிலும், பழக்கத்தால்பெரும்பாலும் நன்மை யுண்டாக்கக் கூடிய குணங்களைப் பெற முயற்சி செய்யவேண்டும். இயற்கையிலேயே நற் குணங்கள் பொருந்தி யிருந்தபோதிலும் செயற்கையால் மாறுபாடு எய்துவதுண்டு. பழக்கத்தால் தீய குணமுடையாரும் நற்குண மடைவதும் உண்டு. இதனை 'ஆன்மாக்கள் சார்ந்ததன் வண்ணம்' என்று சித்தாந்தத்தில் விளக்கி யிருப்பதால் புலனுகிறது. குன்றன்னுரைச் சாரின் குன்றிய சீர்மையராயினும் மாண்புடையராக இலங்குவர். என நாலடியார் தெரிவிப்பதோடு கல்வி, கேள்வி முதலிய அதிகாரங்களோடு நிறுத்தாமல் நல்லினஞ்சார்தல், பெரியாரைத் துணைக்கோடல் என்னும் அதிகாரங்களைச் சேர வைத்திருத்தலிஞல் நற் குணங்களைப் பெற இதுவும் ஓர் கருவி என்பது நன்கு தெரிந்துகொள்ள இடமுண்டு.

மழைத் தண்ணீர் ஒரேவிதமாக எங்கும் பெய்த போதிலும், செம்மண் பூமியில் அம் மண்ணிறத்தையும் ஆற்றினிடத்து ஆற்றுநீர்த்தன்மையையும் கடல் நீரிடத்து கடல் நீர்த்தன்மையையும் அடைந்து அவற்ருேடு ஒன்று பட்டு விளங்குவதைப்போல் மனிதர்களும் சேர்ந்தாருடைய குணங்களைப் பெற்று விளங்குவர்.

“ கடல்சார்ந்தும் இன்னீர்ப் பிறக்கும் மலைசார்ந்தும்
உப்பீண் டுவரி பிறத்தலால் தத்தம்
இனத்தனையரல்லர்.”

என மாறுபட வந்திருக்கிறதே எனின்; பின்னர்க் கூறுங் கருத்தை நோக்கியும், ஒரு முடிவுக்கு வருதல் சாலும்.

செயற்கையால் மனம் மாறுபடாத தன்மை கற்றுத் தேர்ந்த பேரறிவையுடைய சிலர்க்கு மாத்திரம் பொருந்துதலாலும், அறிவுடையவர்களிலும் பலர் சார்ந்தவர்களுடைய குணத்தையே அடைவதாலும், இம்மேற்கோளை எல்லார்க்கும் பொதுப்படக் கையாளுதல் பொருந்தாது.

“ எந் நிலத்து வித்து இடினுங் காஞ்சிரங்காழ் தெங் காகா” என்ற செய்யுட் பகுதி, செயற்கையால் பயனில்லை என்பதை விளக்குகின்றதே யெனின், கூறுதும்.

சிறிதும் இசைப்பயிற்சி யில்லாதவன் ஒருவன் இசை வல்லான் பாடிய இனிய பாட்டின் இன்பத்தை, ஏற்று நுகரும் ஆற்றல் இல்லாமையால் பயனடைய முடியாதவாறு போல, இயற்கையில் சிறிதும் அறிவு இல்லாதவனுக்கு மாத்திரம் நல்லோர் செயற்கையால் பயனில்லை என்று கூறியதே யன்றி, மற்றெல்லாருக்கும் இவ்வுவமை ஒவ்வா தெனக் கொள்க.

ஒருவற்கு நற்குணங்களைப் பெற அவா இருத்தலோடு பெரியாரைத் (நற்குண முள்ளாரைத்) துணைக்கோடல் இன்றியமையாததாகும். இதுகாறும் கூறியவற்ருல் மனோவேகக் குறைவுகளால் குணம் வேறுபடும் என்பதும், முக்குணங்களின் பயன் இவை என்பதும், சார்ந்தவரின் குணம் அடைதல் எளிதென்பதும், குற்றமுடையவராயினும் நல்லாரைச் சார்ந்தொழுகின் நலம் பெறுவர் என்பதும், நற்குணமடைய முயற்சி செய்தல் யாவர்க்கும் அவசியம் என்பதும் குறிப்பிடப்பட்டன.

---

## அருள்திரு. விபுலானந்த அடிகள் மறைந்தது குறித்துப் பாடியவை.

வித்துவான் ஔவை. சு. துரைசாமி பிள்ளை,
ஆராய்ச்சியாளர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

---

சாமிவிபு லானந்தர் தரணியைவிட் டகன்றார்
தமிழ்மகளும் தகுபுலமைத் தனிமகனைத் துறந்தாள்
ஆமிதனுக் கென்செய்வ தெனநைந்து நொந்தார்
அன்பர்களும் அருளுடைய அறவோரு மெல்லாம்
ஏமிழந்த தெம்தஞ்சைக் கரந்தைநகர்ச் சங்கம்
எனநினைந்தேன் அலமந்த தென்றனது நெஞ்சம்
ராம சிதம்பரனார்தம் மாபெரிய வுள்ளம்
இனைவதனை நினைந்தேன்கண் ணருவியினில் நனைந்தேன்

உயர்புலமை மிக்கதிரு வார்கந்த சாமி
ஒழுக்கநெறி மிகுதிருவார் கணபதியா பிள்ளை
அயர்வில்பரி வொடுபணிசெய் அன்புநிறை புலமை
அமைவெள்ளை வாரணந்தான் அருகுறநின் றருளும்
மயர்வில்நிழ லோவியத்தை மனமாரக் கண்டேன்
மாண்புடைய சாமிவிபுலானந்தர் தமையும்
துயர்மிகக்கண் கலுழநீர் துடைத்தினிது கண்டேன்
தூய்மையறம் அருள்புலமைத் தோற்றமிது வென்றேன்.

திருக்கொள்ளம் பூதூரில் திகழ்ந்தஅரங் கேற்றம்
செந்தமிழ்ப்பே ராசிரியர் வந்திருந்த காட்சி
உருக்கொள்ளும் யாழ்நூலும் ஒண்கருவி பலவும்
ஓங்குயர்ந்த செல்வர்களும் அரசாளுங் குழுவும்
கருக்கொள்ளும் எதிர்கால இசைத்தமிழின் மேன்மை
காட்டக்கண் டேன்ஞான சம்பந்தர் கழற்கீழ்
மருக்கொள்ளும் இருக்கையினில் அடிகள்மகிழ்ந் திருந்த
மருமம்அறி யேன்அன் றங் கின்றறிந்தேன் இங்கே.

கரிதுதிரு திகழ்மேனி வெளியமலர்க் கண்கள்
கல்லாடை யுடைசொற்குக் கனிகள்நிக ராகா
பெரிதுதமிழ்ப் புலமைவட மொழியாங்கி லங்கள்
பிறங்குவன நல்லுள்ளம் பேசுவன அறங்கள்

உரிது பிறர் பெருநலமே யுள்ளுவது உறுவார்க்
குதவுவது அடிகள் உயர் செயல் நினைவு மாண்பே
அரிதுபிற ரினிஇவர்போல் அருளறத்தார்க் காண்டல்
ஆதலினால் அடிகள்விபு லானந்தர் அறவோர்.

கயிலாயக் காட்சியினைக் கட்டுரைத்தார் பல்லோர்
கட்டுரைகள் நெட்டுரையாய்க் கருத்தினில் நின்றிலவே
குயிலர்யம் பாடுபொழிற் கரந்தையினில் எங்கள்
குரவர்அருள் திருவிபுலா னந்தர் அவைமேவிப்
பயிலரிய கயிலைமலை படர்ந்தநெறி காட்டிப்
பரவுதிரு நாவரசர் படர்ந்தநெறி காட்டித்
துயிலரிய கண்ணராய்க் கேட்டோர்தம் முள்ளே
தோன்றுகாசியிற் களிக்கச் சொன்மாரி சொரிந்தார்.

முன்னாளைத் தமிழகத்து இசைத்தமிழர் கொண்ட
முளரியாழ் முதலாய யாழியலைக் கண்ட
அந்நாளில் இடைக்கால மாக்கியபல் கொடுமை
அத்தனையும் கணக்கறிவால் ஆய்ந்தறிந்த போதும்
இந்நாளில் பலரந்தக் கொடுமையே எண்ணல்
இனிதறிந்த போதும்அருட் குரவனு ரெங்கள்
சொன்னுடும் அடிகள்விபு லானந்தர் சொல்லில்
சுடுசொல்லோ துயர்சொல்லோ ஒன்றும்தோற் றிலதே.

எண்ணுள ரென்கோமற் றெழுத் தாள ரென்கோ
இயலாய தமிழாளர் இசையாள ரென்கோ
கண்ணுளும் விஞ்ஞானக் கலையாள ரென்கோ
கருத்தாளும் செஞ்சொல்லின் கவியாள ரென்கோ
எண்ணுளும் இவ்வண்ணம் எண்ணிமகிழ்ந் தோமை
எண்ணி யெண்ணிப் புண்ணுக இனிச்செய்த தந்தோ
தண்ணுளர் அருள்விபுலா னந்தரெங்கள் இறையைத்
தனிக்கொண்டு பிரிவித்த தறமில்லாக் கூற்றே.

வன்சொல்லால் கூற்றுவனை வையலாம் வம்மினோ
இன்சொல்லால் நம்மை இனிதளித்த—தென்முனிக்கு
மேலாம் அருள்விபு லானந்த மாமுனிவிண்
பாலாகச் செய்த பழிக்கு.

---

திரு. T. V. சதாசிவ பண்டாரத்தார்,
ஆராய்ச்சித் துறைப் பிரிவு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

---

அந்தோ! விபுலாநந்த அறிஞநீ யவனிதுறந் தகன்றா யென்னுஞ்
சிந்தாகுலச்செய்தி செவிமடுக்க யாஞ்செய்பவஞ் செப்பற் பாற்றோ
எந்தாய்நின் னருண்முகத்தை யென்றுகொலோ காண்பேமென் றேங்கி
[யேங்கி
நந்தாத பெருந்துயருள் நனிமூழ்கி யிஞ்ஞான்று நடுக்குற் றேமால்.

உற்றாரை யான்வேண்டேன் ஊருடன்பேர் வேண்டேனென்
[றுரைத்தா யந்நாள்
கற்றாரை யான்வேண்டே னெனமொழியு மொருநிலையைக் காணே
[னென்று
சொற்றாய்நீ கலைஞரெலாந் துயர்க்கடல்வீழ்ந் தாற்றகிலந் துறத்தல்
[நன்றே
கற்றார்க்கோர் உறுதுணையாம் விபுலாநந் தப்பேர்கொள் கலைவல்
[லோனே.

இந்நாளில் துறவியென இயம்பிடுவோர் எழின்மாடத் தினிதே தங்கி
உன்னாத பொருளில்லை உஞற்றாத செயலில்லை யுன்னைப் போலப்
பன்னாளு மக்கட்குப் பணிபுரிந்து மகிழ்வுற்றோர் பாரில் யாவர்
பன்னாடும் போற்றுமெங்கள் விபுலாநந் தப்பேர்கொள் பாவல் லோனே.

முத்தமிழும் பயின்றிந்நாள் முறையாக வாய்ந்தோர்யார் மொழிமி
[னென்றோர்க்(கு)
உத்தமநீ யுள்ளாயென் றுணர்த்திமிக விறுமாந்தேம் ஓரா தெம்மை
இத்தலத்தே விட்டகன்றாய் இதுவோநின் றண்ணளிதான் இயம்பாய்
[ஐயா
வித்தகனே விழுத்தவத்து விபுலாநந் தப்பேர்கொள் மேன்மை யோனே.

எங்கள்தமிழ்த் தாய்க்கந்நாள் எழிற்சிலம்பொன் றளித்தபிரான்
[இளங்கோ வேந்தன்
துங்கவிபு லாநந்தத் தூயோனா யிவ்வுலகில் தோன்றி முன்னாள்
சங்கமிருந் தாய்ந்தவிசைத் தமிழதனை யாழ்நூலாத் தந்த பின்னே
புங்கமிகுந் திருக்கயிலை புகுந்தனனால் மற்றிதனைப் புலங்கொள் வீரே.

காலஞ்சென்ற பேரறிஞர்,

## விபுலாநந்த அடிகள் மீது பாடிய

# இரங்கற்பாக்கள்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர்,
E. S. வரதராசய்யர்.

---

இசையாரும் பாரதமக ளிருஞ்சுதரு மதவேழ மேந்து மெட்டுத்
திசையாரும் புகழ்ராம கிருட்டினன்றன் றிருப்பெயராற் றிகழும் சங்க
மிசையார்வ முற்றிடைவி டாதுழைத்த பேரன்ப விபுலா நந்தா
தசையாரும் பூதவுடல் தனைவிடுத்துப் புகழுடம்பு தரித்தாய் கொல்லோ!

அற்பகத்துக் கொண்டுபலர்க் கரும்பொருளை யளித்துயர்ந்த யறிஞ ரேறே
வெற்பகத்துக் குறுமுனிவ னிசைத்தமிழை விரித்துரைத்த விபுலா நந்தா
தற்ப மிலாய் பலபுலவர் தளரமனம் புவிமுயக்கந் தணந்து சென்றாய்
கற்பகத்தோன் அவைக்களத்துன் யாழ்ப்புலமை காட்டுதற்குக் கதழ்ந்த [வாறோ

செந்தமிழ்த்தாய் புனைசிலப்பி னரங்கேற்று காதைபலர் தெளியா ராகச்
சிந்தைசெய்து முத்தமிழின் றிறமதனிற் செறிந்திருக்கும் செய்தி [தேர்ந்தே
அந்தமிகும் யாழ்நூலொன் றியற்றியரங் கேற்றியநீ யருவ மானாய்
விந்தையைய விந்திரன்றான் நல்விபுலா நந்தவுனை விழைந்தான் [கொல்லோ!

விண்ணாடு படரமனம் விழைந்தனையுன் யாழ்நூலின் விரிவை யெல்லாம்
பண்ணாடு மினியகுர லரம்பைமுதற் பாவையர்கள் பரிந்து கற்பான்
அண்ணாலுன் றன்வரவு நல்வரவா குகவெனவே அழைத்திட் டார்கொல்
நண்ணாரும் நனிவிரும்பும் அறிஞவிபு லாநந்த நாவல் லோனே.

பாரதமா நிலத்திருந்து குறுமுனிவன் யாழியலிற் பயின்றா யென்று
நாரதமா முனிவரவு நல்கினனோ கின்னரராம் நல்யாழ் வல்லோர்
சாரதையி னருள்படைத்த தனிப்புலவ னெனமனத்துத் தழுவினார் [கொல்
வீரதையின் மனைவாழ்க்கை விடுத்துயர்வார் சிவங்கலந்த விபுலா நந்தா.

சூழிசையாழ்ப் பாணமதிற் றோன்றியநீ கலைபயிலத் தொடங்கி முன்னுள்
ஏழிசையாழ்ப் பாணனருட் பலகைபெறுங் கூடலிற்கற் றேற்ற முற்றாய்
காழிசைவக் குலக்கொழுந்து புகழ்கொள்ளம் பூதூரிற் கற்றோர் போற்ற
யாழியலைத் தந்தாழி சூழ்புவியிற் புகழ்படைத்தா யறிவா னந்தா.

நிலஞ்சார்ந்த கற்பகமென் றிசையண்ணா மலைக்கழகத் தினிது கல்வி
வலஞ்சான்ற தமிழ்த்தலைமை வகித்துயர்ந்தாய் யாழ்ப்பாண மாநகர்க்கண்
நலஞ்சான்ற தமிழ்பல்லோர் தமக்களித்தாய் பிறர்க்குழைக்கும் தகவினாய்
[விண்
புலஞ்சார்ந்தாய் சாகுரவின் புறஞ்சார்ந்து கற்பதற்கோ புலவ ரேறே.

மக்களுக்கே யுழைக்கவென வாணாளர்ப் பணஞ்செய்தாய் மணம்
[செய்கில்வாய்
தக்கதுற வறந்துணிந்தாய் தருகலைகள் கற்றவற்றைத் தக்கோர்க்
[கீந்தாய்
மிக்கவிழு மியகுணமார் தருவிபுலா நந்தனென விளங்கி நின்றாய்
தூக்கமிகப் பலவன்பர் தென்றிசைக்கோ னுனைக்கவர்ந்தான் துட்ட
[னம்மா.

நிதியை வெறுத்தாய் துறவணைந்தாய் நினையாய் மாதர் நேயமதை
மதியை வளர்க்குங் கலைபலவும் மகிழ்ந்தே கற்றாய் வடித்தாய்ந்து
புதிய பொருள்கள் புலப்படுத்துப் புவிவாழ் விகந்தாய் பொருவில்லாய்
விதியை வெல்ல வல்லார்யார் விபுலா நந்த மேதகையே.

அறிவ தறிந்தா யஞ்சுவன வஞ்சி விநய வமைதியுடன்
உறுவ துலக முவகையுற வுஞற்றிக் கடன்செய் திடக்காத்தின்
மறிவைத் தாடு மான்கழலை மருவி மகிழ்ந்தாய் மருவுபுகழ்
திறுவி விபுலா நந்தனென நிகழ்பேர்க் கியைய நின்மலனே.

தாதுக்கற் றோய்ந்தவுடைத் தனியழகு முண்டிதமார் தலையின் சீரும்
சாதுக்க ளிடைப்பழகுந் தனிமுறையுந் தாணய்ந்த பொருளைத் தாங்கி
யேதுக்க ளொடுங்காட்டு மினியபுல மைத்திறனு மிழந்தே மென்றே
மாதுக்க முறவறிஞர் வானிவர்ந்தான் விபுலனெனு மதிவல் லோனே.

---

# சுவாமி விபுலாநந்தர் மறைவு

மகாமகோபாத்தியாய, முதுபெரும்புலவர், பண்டிதமணி,
மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்.

சிறந்த தமிழ்ப் பேராசிரியரும், ஆங்கிலம் முதலிய பல மொழிகளிலும் மிகத் திறமை படைத்தவர்களும் ஆகிய சுவாமி விபுலாநந்தனர் அவர்கள் அணிமையில் பூத உடல் நீத்தமை அறிந்து மிக்க வருத்தம் அடைகின்றேன். இவர்கள் தவ ஒழுக்கமும், அன்பு, அருள் முதலிய உயர் குணங்களும் படைத்தவர்கள்; ஆங்கிலத்திலும் தமிழிலும் ஆராய்ச்சி அறிவும், பேச்சு வன்மையும் வாய்க்கப் பெற்றவர்கள்; என்றும் சாந்த நிலையில் பிறழாதவர்கள்; பலஆண்டுகளுக்கு முன் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில், நாடகக் கலையைப் பற்றிச் சுவாமிகள் அரிய சொற்பொழிவு இயற்றியபொழுது யான் கண்டு இன்புற்றேன். அந்நாள்தொட்டு அன்புநிலை சிறிதும் வேறுபாடு இன்றி வளர்ந்து வந்தது. அச்சொற்பொழிவின் பயனை 'மதங்க சூளாமணி' என்னும் நூல் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின்மூலம்வெளிவந்தது. பின்னர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தபொழுது தமிழிசை நூல்களை ஆராய்ந்து சிறந்த முறையில் '**யாழ் நூல்**' ஒன்று எழுதத் தொடங்கி, அணிமையில் நிறைவேற்றினார்கள். அந் நூல், கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில், திருக்கொள்ளம்புதூர்ச் சிவாலயத்தில் வைத்து அரங்கேற்றப்பட்ட செய்தி தமிழ் நாடு நன்கு அறியும். இவ்வேலை முடிந்ததும், சுவாமிகள் பூத உடல் மறைந்ததை நினையுங்கால், இதற்காகவே அவர்கள் தோற்றம் நேர்ந்ததோ வெனக் கொள்ளத் தக்கதாக வுள்ளது. சுவாமிகளுக்குச் செய்யுள் இயற்றும் திறமையும், உரைநடை எழுதும் வன்மையும் நன்கு அமைந்திருந்தன. கோனூர் சமீன்தார், பெ. ராம. ராம. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள் சுவாமிகள் உடல்நோயுற்றிருந்தது கண்டு உண்டியும், மருந்தும், உறையுளும் உதவிப் பேணினார்கள். காலதத்துவம் வரையறைப்பட்ட அளவு முடிந்ததும் மிகப் பெரிய அறிவுக் களஞ்சியத்தையும் கவர்ந்து கொள்ளலாயிற்று. இந்நிகழ்ச்சி நம்மனோர் உள்ளத்தை வருத்தும் இயல்பினது. சுவாமிகள் சித்தசாந்தி உடையவர்களாதலின், அவர்கள் குறிக்கோளுக்கு பௌதிக உடல் நீத்தது மாறுபாடு இன்றெனினும், அவர்கள் உடலொடு கூடி இன்னும் பல்லாண்டு இருப்பின், தமிழுலகம் பெரிதும் பயன் எய்துமே! அங்ஙனம் இல்லாமல் நேர்ந்தது பெருங் குறையே! என் செயலாம்? அடிகளைத் தமிழுக்கு அளித்த தெய்வம், தமிழ் மக்கள் எதிர்பார்த்தபடி நெடிது வையாமல் ஏற்றுக்கொண்டது பெரிதும் இரங்கத்தக்கதே. அடிகள் நல்லுயிர் இறை அடி நீழலில் இயைந்து அழிவில் இன்ப நுகர்ச்சியில் தலைப்பட்டு வாழ்வதாக.

அருட்டிரு. விபுலாநந்த அடிகளார்

# வாழ்க்கை வரலாறு.

வித்துவான். க. வெள்ளைவாரணர்.



யாழ்ப்பாணத்திலுள்ள உடுவில் வட்டுக் கோட்டைக் கிராமங்களிலிருந்து தமிழ்க் குடும்பத்தார் சிலர் பல ஆண்டுகளுக்குமுன் இலங்கையின் கீழ்பால் மட்டக்களப்புப் பகுதியிற் குடியேறினர்கள். அக்குடும்பங்களுள் மட்டக்களப்பிலுள்ள காரேறு மூதூரில் வாழ்ந்த வேளாண் செல்வராகிய சாமித் தம்பியார் குடும்பமும் ஒன்றாகும். திரு சாமித் தம்பியா ரவர்கள் திருந்திய கல்வியுஞ் செந்தமிழ்ப் பற்றும் பொருந்திய தமிழறிஞராவர். இப்பெரியார் யாழ்ப்பாணத்து உடுவிலைச் சேர்ந்த திரு. இராசகோபால பிள்ளையவர்களின் திருமகளார் கண்ணம்மையாரை மணந்து இல்லறம் நிகழ்த்தினர் அருந்தவர்ப் போற்றலும் ஆருயிரோம்பலும் விருந்தெதிர் கோடலும் எனத் திருந்திய மனைவாழ்க்கையினை மேற்கொண்ட இவ்விருவருக்குங் தவப் புதல்வராக கர, ஆண்டு பங்குனித் திங்கள் ௰௯ (1842, மார்ச்சு, 29) ஆம் நாள் யாழ் நூலாசிரியர் அருட்டிரு. விபுலாநந்த அடிகளார் தோன்றினர்கள். அடிகளாரது இளம்பருவப் பெயர் மயில் வாகனனர் என்பதாகும். தம் தாயாராகிய கண்ணம்மையாரது நிறம் நல்ல பொன்னின் நிறமென்றும் தம் தந்தையார் சாமித் தம்பியாரது நிறம் தமது உடல் நிறத்தைப் போன்று கரிய நிறமென்றும் அடிகளார் சொல்லக் கேட்டிருக்கின்றேம்.

மயில் வாகனனர்க்கு எழுத்தறிவித்தவர் குஞ்சுத்தம்பியாசிரியராவர். மயில் வாகனனர் தம் தந்தையாரின் மைத்துனராகிய திரு. சிவகுருநாத பிள்ளையவர்களிடத்திலும் திரு. வசந்தராச பிள்ளையவர்களிடத்திலும் தமிழ்க் கல்வி பயின்றனர். மேற்குறித்த திரு. சிவகுருநாத பிள்ளையவர்களிடத்தில் மயில் வாகனனர் சோதிடமும் பயின்ருர் என்பர். இவரது பத்தாம் ஆண்டில் தமிழ் நாட்டு யாத்திரை சென்ற சாமித் தம்பியாரவர்கள் தில்லைக் கூத்தனை வணங்கி நாவலர் சரித்திரம் நாவலர் இயற்றிய சைவ நூல்கள் முதலிய புத்தகங்களை வாங்கி வந்து இவருக்குத் தந்தார்கள். அவற்றைப் பெற்று மகிழ்ந்த மயில்வாகனனர் தமது வாழ்வில் ஆறுமுக நாவலவர்களைப் போன்று தமிழ்த்தொண்டும் சமயத்தொண்டும் ஆற்றித்

தமிழர் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உழைத்தல் வேண்டும் என உறுதிகொண்டனர். இவர் தமது பன்னீராட்டைப் பருவத்திலேயே கந்தபுராணம் வில்லிபுத்தூரார் பாரதம் முதலிய தமிழ் நூல்களை நன்கு பயின்று தம் பெற்றோரையும் உறவினரையும் மகிழ்வித்தார். காரைத்தீவில் சைவப் பாடசாலைத் தலைமை யாசிரியராயிருந்த யாழ்ப்பாணத்துப் புலோலி பொ. வைத்தியலிங்க தேசிகரவர்களிடத்திலே தமிழ் நூல்களுடன் ஓரளவு வடமொழியும் பயின்றார்.

வீட்டில் சிறிது ஆங்கிலப் பயிற்சி பெற்ற மயில் வாகனனாரை 1902-ஆம் ஆண்டில், கல்முனை மெதடிஸ்ற் பள்ளிக்கூடத்தில் ஆங்கிலக் கல்வி பயிலப் பெற்றோர்கள் அனுப்பி வைத்தனர் பின்னர் மட்டக்களப்பி லுள்ள மத்திய கல்லூரியிலும் செயின்ட் மிக்கேல் கல்லூரியிலும் பயின்று 1908-ஆம் ஆண்டில், தமது பதினாரும் அகவையில் கேம்பிரிட்ஜ் சீனியர் (Cambridge Senior) தேர்வில் மயில் வாகனனார் வெற்றியெய்தினர். செயின்ட் மைக்கேல் கல்லூரிப் பேராசிரியர் வணக்கத்திற்குரிய வொணல் சுவாமியாரும் ஈழமண்டலத்துக் கணிதப் பேராசிரியர் தில்லை நாயகம், B.A., அவர்களும் மயில் வாகனனார்க்கு எண்ணூல் பயிலும் ஊக்கத்தைத் தோற்றுவித்தார்கள்.

மயில் வாகனனாரவர்கள் 1911-ஆம் 12-ஆம் ஆண்டுகளில் கொழும்பு ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியிற் சேர்ந்து பயின்றார்கள். அக் காலத்தில் கோப்பாயைச் சேர்ந்த பண்டிதர், எஸ். கந்தையா பிள்ளை யவர்கள், வித்துவான் சி. தாமோதரம் பிள்ளை யவர்கள், முதலியார் சிற். கயிலாய பிள்ளை யவர்கள் ஆகிய பெருமக்களிடம் தமிழிலக்கிய இலக்கண நூல்களைப் பாடங் கேட்டார்கள். இவர்களுக்குச் சங்க நூல்களையும் சிலப்பதிகாரத்தினையுஞ் சுவைபெறக் கற்பித்தவர் வெள்ளியங் திருமலைகிழார் சிற். கயிலாய பிள்ளை முதலியாராவர். இவர்பால் சிலப்பதிகார நூல் நயங்களைச் செவ்விதின் உணர்ந்து மகிழும் வாய்ப்பு ஏற்பட்டமையினாலும், தாம் பிறந்த 1892 ல் இந்நூல் ஐயரவர்களால் முதல் முதல் அச்சிட்டு வெளிப்படுத்தப் பெற்றபடியினாலும், சிலப்பதிகாரத்தின் பாட்டுடைத் தலைவியாராகிய கண்ணகியாரது திருக்கோயில் மட்டக்களப்பின்

பகுதிகளில் கயவாகு மன்னனால் நிறுவப்பட்டுள்ளமை யினாலும், தம் தாயார் கண்ணம்மையாரவர்கள் அக்கோயில் களிற் சென்று பத்தினித் தெய்வமாகிய கண்ணகியாரை வழிபடு மியல்பினை அடிக்கடி பார்த்திருந்ததனாலும், மயில் வாகனனார்க்குச் சிலப்பதிகாரத்தினைப் பயிலுவதில் தனி விருப்பு உளதாயிற்று. இவ் விருப்பமே இசைத் தமிழ் நாடகத் தமிழ் ஆராய்ச்சியில் இவர்களைத் புகுவித்த தென்பதனை யாழ் நூலில் இனிது விளக்கியுள்ளார்கள்.

1913-ம், 14-ம் ஆண்டுகளில் மட்டக்களப்பு செயின்ட் மிக்கேல் கல்லூரியின் ஆசிரியராக மயில் வாகனனார் தொண்டாற்றினார். 1914-ஆம் ஆண்டில் இவர்தம் தாயார் கண்ணம்மையார் இறைவனடி சேர்ந்தார்கள். பின்னர்த் தந்தையார் சாமித் தம்பியாரவர்கள் இவரது கல்வி வளர்ச்சிக்கு வேண்டும் எல்லா வுதவியினையுஞ் செய்து வந்தார்கள்.

1915—16-ஆம் ஆண்டுகளில் இலங்கை யரசினர் டெக்னிகல் கல்லூரியிற் பயின்ற மயில் வாகனனார் பேரா சிரியர் டாக்டர் F. A. ஜோசெப், M. W. N. ரே என்னு மிருவர்பாலும் விஞ்ஞான உண்மைகளைக் கற்று விஞ்ஞான பட்டத் தேர்வில் முதலாவது பிரிவில் தேர்ந்து தகுதி யுரை பெற்றார். இவ் வாண்டிலேயே மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதத் தேர்வுக்குச் சென்று வெற்றி யெய்திப் பண்டித மயில் வாகனனார் எனப் பாராட்டப்பெறும் சிறப்பெய்தி னார்கள். இலங்கையிலிருந்து முதன் முதல் மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டிதத் தேர்வில் வெற்றி பெற்றவர் மயில் வாகனனார் ஒருவரே யாவர். இவ் வாண்டில் இலங்கைக்கு வந்த இராமகிருட்டின சங்கத்துத் தொண்டர் சுவாமி சர்வா நந்தரவர்களை அணுகித் தத்துவ நுண்பொருள்களைக் கேட்டுணர்ந்தார்கள். 1917-ஆம் ஆண்டு கொழும்பு அர சினர் டெக்னிக்கல் கல்லூரியில் வேதிநூல் உதவியாசிரிய ராக அமர்த்தப்பட்டார். பின்பு யாழ்ப்பாணத்திலுள்ள செயின்ட் பேற்றிக்ஸ் (St. Patrick's) கல்லூரியில் 1920 வரை வேதிநூல் தலைமையாசிரியராகப் பணியாற்றினார்கள். இக் கல்லூரியில் இருக்கும்பொழுதே இலண்டன் பல்கலைக் கழக B. Sc. தேர்வுக்குச் சென்று வெற்றி பெற்றார்கள். இக் காலத்தில் சுன்னாகம் குமாரசுவாமிப் புலவர் முதலிய

தமிழ்ப் புலவர்களைக் கண்டு அளவளாவி மகிழ்ந்தார்கள். 1920—22-ம் ஆண்டுகளில் மானிப்பாய் இந்துக் கல்லூரியின் தலைமையாசிரியராகப் பணி செய்தார்கள். இக் காலத்தில் ஆரிய திராவிட பாஷாபிவிருத்தி சங்கத்தை நிலைபெறச் செய்தார்கள்.

இங்ஙனம் பல்கலை பயின்ற நல்லாசிரியராகிய பண்டித மயில்வாகனனார் அவர்கள் தம் தாய் தந்தையரிருவரும் விண்ணுலகடைந்தபின் கலைக்கெலாம் பொருளாகி நின்ற இறைவனை யன்றி ஒரு பற்றும் இல்லாமை யுணர்ந்து நிலையாமை கண்டு அறம் வளர்க்கும் குறிக்கோள் கொண்டு 1922-ம் ஆண்டில் சென்னையிலுள்ள இராமகிருட்டின சங்கத்தைச் சேர்ந்து பிரமச்சரிய நிலையில் நின்று பிரபோத சைதன்யர் என்னும் பெயருடன் சமயத்தொண்டுசெய்வாராயினர். சென்னையில் இராமகிருட்டின மடத்தின் சார்பில் வெளிவரும் வேதாந்த கேசரி யென்னும் ஆங்கில இதழின் ஆசிரியராகவும் தமிழ் வெளியீடாகிய இராமகிருட்டின விசயத்தின் ஆசிரியராகவும் அமர்ந்து மெய்யுணர்வுரைகளை வெளியிட்டார்கள். சென்னையிலிருக்கும் பொழுது தென்கலைச் செல்வர் பெரும் பேராசிரியர் உ. வே. சாமிநாதையரவர்கள். மறைமலையடிகளார், ஞானியார் அடிகளார் முதலிய பேரறிஞர்களைக் கண்டு உரையாடி அளவளாவும் வாய்ப்பு ஏற்பட்டது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் தொண்டுகளிலீடுபட்டு பண்டிதத் தேர்வின் தேர்வாளராகத் தொண்டாற்றினார்கள். அச் சங்கச் சார்பில் வெளிவரும் செந்தமிழ் என்னும் திங்கள் வெளியீட்டிற்குச் சிறந்த பொருளுரைகளை வழங்கினார்கள். இவர்களது புலமைத் திறத்தினைத் தமிழகத்தார் நன்குணர்ந்து பாராட்டுவாராயினர். இலங்கை சோ. பி. அருணாசலமவர்கள் இலங்கைச் சைவபரிபாலன சபை, கொழும்பு விவேகாநந்த சபை முதலியவற்றின் சார்பாக இவர்களை யழைத்துப் போற்றினார்கள்.

1924-ம் ஆண்டு சித்திரைத் திங்கள் மதிநிறைநாளில் இராமகிருட்டின திருமடத் தலைவர் அருட்டிரு. சிவாநந்த சுவாமியவர்கள் பிரபோத சைதன்யர் என்னும் மயில் வாகனனார்க்கு மெய்யுணர்வுரை வழங்கி, சுவாமி விபுலாநந்தர் என்னும் துறவுநிலைப் பெயரினைச் சூட்டி யருளி

ணர்கள். அது முதல் விபுலாநந்த சுவாமிகள் என்னும் பெயரே எங்கும் வழங்குவதாயிற்று.

ஆங்கில நாட்டு பெரும் புலவராகிய செகப்பிரியர் நாடகங்களில் அமைந்துள்ள நாடக இயல்பினையும் வட மொழி நாடக அமைதியினையும் இயலிசைநாடகப் பொருட் டொடர் நிலையாகிய சிலப்பதிகாரத்திலமைந்த பண்டை நாடகத் தமிழ் இயல்பினையும் ஒப்பு நோக்கி ஆராய்ந்து மதங்க சூளாமணி என்னும் நாடகத் தமிழ் நூலினை மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் வாயிலாக வெளியிட்டார்கள்.

1925 முதல் 1930 வரை இலங்கையிலுள்ள இராம கிருட்டின மடத்தின் சார்பில் பல பள்ளிக்கூடங்களை நிறுவி வளர்க்கும் கலைத் தொண்டில் அடிகளார் ஈடுபட்டுழைத் தார்கள். திருக்கோணமலையில் இராமகிருட்டின மடத்தைச் சேர்ந்த இந்துக் கல்லூரியினை நிலைநிறுத்தி அதன் தலைமை யாசிரியராகவும் தொண்டு புரிந்தார்கள் 1926-ம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தாரின் கேள்விப்படி சென்று இராமநாதபுர மன்னரைத் தலைவராகக்கொண்ட தமிழ்ப் பல்கலைக் கழக விசாரணைச் சபையின் முன் சான்று பகர்ந் தார்கள். பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழகமும் நிறுவப்பெற்றது. 1931-ம் ஆண்டில் செட்டிநாட்டரசர் பேரறிஞர் அண்ணாமலைச் செட்டியார் அழைப்பிற் கிணங்கி அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தமிழ்ப்பகுதித்தலைமைபூண்டு தமிழ் நாட்டின் முதன்மைத் தமிழ்ப் பேராசிரியராக 1933 வரை மூன்றாண்டுகள் தமிழ்ப்பணி புரிந்தார்கள். மூன்றாண்டு களிலும் நம்மடிகளவர்கள் செய்தருளிய நிலைத்த தமிழ்த் தொண்டுகளும்திட்டங்களும்தமிழறிஞர்களால் பாராட்டிப் போற்றும் சிறப்புடையனவாம். அடிகளாரவர்கள் அக் காலத்தில் ஆற்றலொடு மேற்கொண்ட செயல் முறைகளை அறிஞர் பலரும் வியந்து பாராட்டக் கேட்டிருக்கின்றேம். பல்கலைக்கழகத் துணைத்தலைவர் வெளியூர் சென்ற காலத்து அடிகளாரவர்களே அப் பொறுப்பை மேற்கொள்ளும் பெருமை பெற்றிருந்தார்கள். அந் நாளில் தமிழகத்தில் மிகச்சிறந்தவர்களென மதிக்கப்பெறும் புலவர் பெருமக்கள் அடிகளார் ஆட்சியின் கீழ் தமிழ்த்தொண்டு புரிந்தார்கள். அவர்களுடன் அன்பும் அமைதியும் நிலவப் பழகிய நாகரீகப் பண்பு அடிகளாரின் சிறப்புரிமையாயிற்று. அடிகளாரவர் களுக்குக் கீழை நாட்டுக் கலைத்துறைகளை மேற்பார்க்கும்

பொறுப்பும் உளதாயது. அந் நிலையில் பல்கலைக் கழக இசைக் கல்லூரியினை அடிகளார் கண்காணிக்கத் தொடங்கினார்கள். இயலிசை நாடகமெனப் பண்டையோர் வளர்த்த முத்தமிழுள் நடுவணதாகிய இசைத் தமிழை இசைக் கல்லூரியிற் புறக்கணித்த இழிநிலையை அடிகளார் அகற்ற எண்ணினார்கள். இளங்கோவடிகள் சிலம்பிற் பொதிந்து வைத்த பழந்தமிழ் இசைமரபினை மீண்டும் உருப்படுத்தி நிலைநிறுத்தும் தொண்டில் அடிகளாரது உள்ளம் முனைந்து நின்றது. இவ் இசையாராய்ச்சியினை மேற்கொள்ளுதற்கு அப்பொழுது இசைக் கல்லூரி விரிவுரையாளராயிருந்த சங்கீத கலாநிதி க. பொன்னையா பிள்ளையவர்களிடம் கர்நாடக சங்கீதமென இக் காலத்து வழங்கும் இசையின் அமைதியினை நன்கு கேட்டறிந்தார்கள். பழந்தமிழாசிரியர் திருபொன்னோதுவார் மூர்த்தியவர்களிடம் சைவ ஆதீனங்களில் வழங்கும் திருமுறைப் பண்ணமைதியினையும் செய்யுளமைதியினையும் விரைவி அறிந்து கொண்டார்கள். இக் குறிப்புக்களையும் சங்க இலக்கியங்களிற் கண்ட இசையமைதி, யாழ்க் கருவியினியல்பு என்பனவற்றையும் அடிப்படையாகக்கொண்டு, ஏழிசைச் சூழல் புக்கு ஆராயத் தொடங்கி அன்றுமுதல் இன்றுவரை ஏழிரண்டாண்டுகள் இடைவிடாது உழைத்தார்கள். அடிகளார் அண்ணாமலை நகரில் தங்கியிருந்தபொழுது அருண்மிகு. கேதாரேசுவரானந்தரவர்களும் உடனிருந்தார்கள். உள்ளத் தறுகண்மை மிக்க இப் பெரியாருடன் அண்ணாமலை நகருக்கு அண்மையில் பழந்தமிழ்க் குடிகள் வாழும் சேரிகட்குச் சென்று அங்குள்ள இளஞ் சிறுர்களுக்கு உணவும் உடைகளுமுதவிக் கல்வி பயிற்றியதிறம் அடிகளாரது நற்றொண்டுக்கு எடுத்துக்காட்டாகும். இங்ஙனம் தமிழ்த் தொண்டும் சமூகத் தொண்டும் செய்திருந்த அடிகளாரை இராமகிருட்டின திருமடத் தலைவர் அழைத்து இலங்கையிலுள்ள பள்ளிக்கூடங்களை மேற்பார்க்கும் பொறுப்பினைத் தந்து அங்கு அனுப்பினார்கள். இலங்கைக்குச் சென்ற அடிகளார் தம்முயற்சியான் ஈட்டிய பொருளைக்கொண்டு மட்டக் களப்பில் தமது அருட்குரவர் சிவாநந்த சுவாமிகளின் திருப்பெயரால் நிறுவிய கலைக் கழகமே சிவாநந்த வித்தியாலயமாகும். இக்கலை நிலயத்தில் சாதி சமய வேறுபாடின்றி ஏழை மாணவர் யாவரும் தம் வறுமை நிலை மறந்து அரசிளங்குமரரெனக் கலை பயிலும் நிலையில்

அடிகளார் வகுத்த சீர்திருத்தங்கள் யாவரும் கண்டு மகிழ்தற்குரியனவாம்.

1935-ல் சென்னைப்பல்கலைக் கழகத்தார் தமிழாராய்ச்சி விசாரணைக் குழுவில் அடிகளாரையும் ஓர் உறுப்பினராக அழைத்தார்கள். அவ்வழைப்பினை ஏற்றுச் சென்ற இவர்கள் தம் உளத்திற்பட்ட கருத்தினை நடுநிலை திறம்பாது எடுத்துரைத்தார்கள். தமிழாராய்ச்சிக்குரிய திட்டத்தையும் வகுத்துரைத்தாகள். இவ்வாண்டில் திருவண்ணாமலையில் நிகழ்ந்த சைவசித்தாந்த மகா சமாசத்தின் ஆண்டுவிழாவில் சைவர் மகாநாட்டுத் தலைவராக அடிகளார் நிகழ்த்திய தலைமையுரை சைவசித்தாந்த சமயத்தின் முடிபொருளாகிய அருள் ஞானத்தினை இனிதுணர்த்தி யாவரையும் திருவருள் இன்பத்தில் இகலின்றித் திளைக்கச் செய்யுஞ் சிறப்பினதாகும். 1936-ல் சென்னைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் பழந் தமிழரின் இசைக் கருவியாகிய யாழ் முதலியவை பற்றிச் சிறப்புச் சொற்பொழிவுகள் நடத்தினார்கள். இச் சொற்பொழிவுகளின் நுட்பத்தினை யுணர்ந்த பெரும் பேராசிரியர் சாமிநாதையரவர்கள்' ஒவ்வொரு நாளும் தவறாது வந்திருந்து கேட்டு மகிழ்ந்து அடிகளின் ஆராய்ச்சி உணர்வினை வியந்து பாராட்டி, இவ்வாராய்ச்சியினை நூலுருவாக்கித் தரல்வேண்டும் என வற்புறுத்தினார்கள். சொற்பொழிவுகளின் சுருக்கங்கள் ஆங்கில இதழிலிலும், தமிழிதல்களிலும் அப்பொழுது வெளிவந்தன. இவ்வாறு நம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் இருபத்திரண்டாம் ஆண்டு விழாவிலும் பிற கழகங்களிலும் அடிகளார் தலைமை தாங்கி நிகழ்த்திய நல்லுரைகள் யாவும் புதுமையும் கலை நுட்பமும் நிரம்பி கேட்டோரைப் பிணிக்கும் திறமுடையனவாம்.

1937ம் ஆண்டில் திருக் கயிலாய யாத்திரைக்குச் சென்ற அடிகளாரவர்கள் பொற்கோட் டிமயத்தின் பொலிவினைக் கண்டு திபேத் முதலிய இடங்களில் வாழும் மக்கள் இயல்பினையும் தெரிந்து கொண்டார்கள். செல்லுதற்கரிய அருநெறியிற் சென்று திருக்கயிலை மலைமீதேறி அன்பர் உள்ளக் கமலத்தில் அகலமாக எழுந்தருளிய பெருமானை வெள்ளிமலையில் கண்குளிரக் கண்டு மகிழ்ந்தார்கள். மீண்டும் தமிழ் நாடு திரும்பிய அடிகளாரவர்கள் தாம்

கண்ட கயிலைக் காட்சியை உளத்திற்கொண்டு காடவர் கோன் கழற்சிங்கன் எனப்பாராட்டப் பெற்ற இராச சிம்ம பல்லவமன்னன்,கயிலையின் இயல்பு அமையக்காஞ்சி நகரில் எடுப்பித்த கயிலாய நாதர் திருக் கோயிலையும் கண்டு வணங்கி மகிழ்ந்தார்கள். தாம் கண்ட திருக் கயிலையின் காட்சியையும் அத் திருமலையை அடைதற்குரிய நெறிகளின் இயல்பினையும் திருநாவுக்கரசடிகளார் அவ்வரு நெறியிற் சென்று மீண்ட திறத்தினையும் கேட்டோர் கண் முன் புனையா ஓவியமாகத் தோன்றும் வண்ணம் எடுத் துரைத்துச் செல்லுமிட மெல்லாம் இறைவன் திருவரு ளியல்பினை இனிது விளக்கினார்கள். அடிகளாரது விரி வுரையைக் கேட்ட யாம் அவர்கள் சொல்லிய அரு நெறியே சென்று அவர்களுடன் கயிலைக் கோலத்தைக் காணும் நிலையினராய் எம்மை மறந்தோம். திருக் கயிலை மலையின்மேல் செல்லச் செல்ல செல்வோரது உடற்பாரம் குறைந்து எளிதின் இயங்குதற் கேற்ற நிலையுளதாகு மென்பதனை அடிகளார் தம்மனுபவத்தால் அறிவுறுத்தி னார்கள். கயிலைக் காட்சியினைக் காணப்பெற்றோர் அவ் வழகிய காட்சியிலேயே இடைவிடாது தினைத்திருப்பதன்றி இங்கே திரும்பமாட்டார்களென்றும், திருநாவுக்கரசரை இறைவன் இடைநின்று தடுத்துத் தமிழ் நாட்டிற்குத் திரும்பச் செய்ததன் கருத்து, அப்பெருந்தகையார் கயிலைக் கோலத்தினைக் காணநேர்ந்தால் இவண்மீளார்; அதனால் மீளவும் தமிழர் நாவரசர் அருளுரைகளைப் பெறுதற்கு இயலாதுபோகும் என்பதேயாம் எனவும்,எம்மைப்போலக் கயிலைக் கோலத்தைக் கண்ட பின்னரும் மீளுதற்கேற்ற கல் நெஞ்சம் நாவரசர்க்கில்லை யெனவும் அடிகளார் கண்ணீர் ததும்பக் கூறிய காட்சி இன்றும் எம்முள்ளத்தில் நிலைபெற்றுள்ளது.

இராமகிருட்டின மடத்தின் சார்பில் இமயமலைத் தவப் பள்ளியினின்றும் வெளிவரும் 'பிரபுத்த பாரதம்' என்னும் ஆங்கிலத் திங்களிதழின் ஆசிரியராக 1939 ஆம் ஆண்டில் அடிகளாரவர்கள் இமயமலைத் தவப்பள்ளிக்குச் சென்றார்கள். செல்லும் வழியில் நம் சங்க ஆண்டுவிழா விற் கலந்துகொண்டு திருக் கயிலாய யாத்திரையைப் பற்றி அரியதொரு விரிவுரை நிகழ்த்தினார்கள். தமிழவேளவர்கள் வேண்டிக் கொண்டபடி இசை நூலாராய்ச்சியைத்

தொடங்கி நிகழ்த்துவதாகக் கூறிச் சென்றூர்கள். அவ்வாறே இமயமலைத் தவப்பள்ளியி லுறைந்து, ஆளுடைய பிள்ளையாரும் நம்பியாரூரரும் திருநெறிய தமிழாற் பாடிப் போற்றிய திருக்கேதார மலையினை நோக்கிய வண்ணம் ஆழ்ந்த இசைத் தமிழராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும் அடிகளாரது உள்ளத்தில் மலைமகளாகிய எம்பெருமாட்டியின் திருவருளினலே இசைநூற் பொருள் இனிது புலனுயிற்று. சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் குறித்த பன்னிரு பாலையினுருவங்கள் தெளிவு பெறத்தோன்றலாயின. அதனல் இசைத்தமிழ் நுட்பங்கள் யாவும் ஒன்றன்பின் ஒன்ருகப் புலப்படத் தொடங்கின. யாழ்நூலும் ஒருவாறு நிறைவுபெறுதற்கு வழியேற்பட்டது. பிரபுத்த பாரதம் என்னும் திங்களிதழ் ஐரோப்பா அமெரிக்கா முதலிய மேலை நாடுகளிலும் விரும்பிப் படிக்கப்பெறும் சிறப்புடையதாதலால், அதன் ஆசிரியராகிய அடிகளாரவர்கள் பண்டைத் தமிழ்ப் புலவர்களின் நுண்புலமையினை ஆங்கில மொழியிற் கட்டுரை வாயிலாக இனிது புலப்படுத்திஞர்கள். அந்நிலையில் வட நாட்டிலுள்ள பேரறிஞர் பலரும் தமிழ் நூற்சுவையினை அடிகளார் வாயிலாக உணர்ந்து மகிழ்ந்தார்கள். மீண்டும் தமிழ்நாடு திரும்பிய அடிகளாரவர்கள் நம் சங்கத் தமிழ்ப் பெருமன்றத்திலும் அதனையடுத்த அகத்தியர் திருமடத்திலும் தங்கியிருந்து யாழ்நூலிலுள்ள பாயிரவியல், யாழுறுப்பியல், இசை நரம்பியல், பாலைத்திரிபியல் என்னும் பகுதிகளை எழுதிமுடித்தார்கள். இந்நிலையில் மீண்டும் கல்கத்தா நகரத்தில் பெரிய மடத்தில் தங்கி அலுவல் கண்காணிக்குங் கடமையை இராம கிருட்டின சங்கத்தார் அடிகளார்க்குச் சுமத்தினர். அங்கிருந்து பணிபுரியுங் காலத்தில் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் அடிக ளாருடன் ஒருங்கிருந்து தமிழ்த் தொண்டாற்றிய துறவியும் தமிழிலக்கண நூல்களைஎழுத் தெண்ணிப் படித்தவரும் ஆகிய ஆசிரியர் ரா. கந்தசாமியாரவர்கள் பிரிவுக்கு வருந்திக் 'கங்கையிலெழுதி யிட்ட ஓலை' என்னுங் கையறு நிலைச் செய்யுளை யியற்றிஞர்கள்.

கல்கத்தாவி னின்றும் மீண்ட அடிகளாரவர்கள் திருவாளர் பெ. ராம. ராம. சிதம்பரஞ் செட்டியார் அவர்கள் விருப்பிற் கிணங்கிப் புதுக்கோட்டையில் அவர் தமக்குரிய 'இராம நிலயத்'திற் றங்கி யாழ்நூலின்

பிற்பகுதிகளாகிய பண்ணியல், தேவாரவியல், ஒழிபியல் என்னும் பகுதிகளை எழுதி முடித்தார்கள். இந்நிலையில் இலங்கைப் பல்கலைக் கழகம் நிறுவப்பெற்றது. அடிகளாரை மீண்டும் கல்கத்தாவிலுள்ள தலைமை மடத்துக்கு வரும்படி திருமடத்தார் பணித்தனர். இலங்கைத் தலைவர்களும் சங்கங்களும் பல்கலைக் கழகத்தாரும் அடிகளாரைப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பவேண்டுமென இராமகிருட்டின சங்கத்தாரிடம் முறையிட்டுக்கொண்டார்கள். திருமடத்தாரும் அவ் வேண்டுகோளைச் செவிமடுத்து அடிகளாரை இலங்கைப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பி வைத்தனர். ஆகவே 1943 ஆம் ஆண்டின் பிற்பகுதியில் அடிகளார் இலங்கைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரியரானார். சென்ற ஐந்தாண்டுகளுக்கிடையே கோடை விடுமுறைக் காலங்களிலும் பிற விடுமுறைகளிலும் அடிகளார் தமிழ்நாட்டுக்கு வந்து புதுக்கோட்டையில் இராமநிலையத்தில் தங்குவது வழக்கம். அக்காலங்களில் அவர்கள் ஆராய்ந்து கண்ட குறிப்புகள் பல யாழ்நூலி லிடம்பெற்றன.

சென்ற கோடை விடுமுறையில் புதுக்கோட்டைக்கு வந்தபோது மிகவுந் தளர்ந்த நிலையிற் காணப்பெற்றார்கள். சருவசித்து ஆண்டின் முதல்நாள் திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தில் கண்ணப்பரது அன்பின் நிலைபற்றி இனிய செய்யுளைப் பாடிக் கவியரங்கேற்றினார்கள். அப் பாடலை யியற்றும் நிலையில் கண்ணப்பரது அன்பின் மிகுதியை நினைந்து கசிந்துருகிக் கண்ணீர்மல்கும் நிலையினைப் பெற்றார்கள். அன்றுதொடங்கித் திருமுறைப் பாடல்களையும் அன்பின் பிழம்பாகிய பழந்தமிழ்ச் செய்யுட்களையும் படிக்கும்போதெல்லாம் தம்மை யறியாமல் கண்களில் அன்புநீர் சொரிவது அவர்களது மாற்றமுடியாத இயல்பாயிற்று. உணவை மறந்து உறக்கத்தை மறந்து தம் உடம்பை மறந்து தமிழரது இசைத்தமி ழியல்பினையும் பிற நலங்களையும் அன்பர்களுக்கு அறிவுறுத்துவதே அடிகளாரது பணியாயிற்று. இவ்வியல்பு சென்ற வைகாசித் திங்கள் ௨௨, ௨௩ ஆம் நாட்களில் திருக்கொள்ளம்பூதூரில் நிகழ்ந்த அரங்கேற்று விழாவிற் கலந்துகொண்ட அறிஞர்கட்கு நன்கு புலனும். யாழ்நூல் அரங்கேற்று விழா நிறைவேறியதும் இரண்டு வாரத்திற்கு மேலாகத் திருக்கொள்ளம்பூதூரிலும், புதுக்கோட்டையிலும் தங்கி மருந்துண்டு,

ஓரளவு உடல்நலம் பெற்று, 29—6—47 காலை புதுக் கோட்டையிலிருந்து புறப்பட்டு, 30—6—47 கொழும்புக் குச் சென்றார்கள். ஒருவாரம் பல்கலைக் கழகப் பணியில் ஈடுபட் டுழைத்தார்கள். தம்மைக் காணவரும் அன்பர்க ளிடம் யாழ்நூற் பொருள் நுட்பங்களை எடுத்து விளக்கி னார்கள். சூலை இரண்டாவது வார இறுதியில் அவர்கள் உடம்பு மீண்டும் பாரிச வாயுவினல் தாக்கப்பட்டது. அத னல் வரவர உடல்நலங் குன்றியது. அதுகண்டு கலங்கிய அன்பர்கள் அடிகளாரவர்களைக் கொழும்பிலுள்ள சிறந்த மருத்துவ நிலையத்திற் சேர்த்து வேண்டும் மருத்துவ வசதி களைச் செய்தார்கள். கொழும்பிலுள்ள சிறந்த மருத்துவர் பலரும் ஒருங்கிருந்து தம்மா லியன்ற முறையிலெல்லாம் அடிகளாரின் நோய்நீக்க முயன்றார்கள். முயன்றும் யாது பயன்? அடிகளார் 19—7—47 சனிக்கிழமை யிரவு ஒன்றேகால் மணிக்கு இவ் வுலக வாழ்வினை நீத்து நண் ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி அண்ணலார் சேவடிக் கீழ் அமர்ந்திருப்பாராயினர். அடிகளாரது பிரிவு தமி ழகத்தார்க்கு ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும் எனத் தமிழ ரனைவரும் உளமுடைந்து கலங்குவா ராயினர்.

20—7—47 ஞாயிறு பிற்பகல் அருட்டிரு. விபுலாநந்த அடிகளாரின் திருமேனியைக் கண்டு வழிபட விரும்பிக் கொழும்பிலுள்ள பேரறிஞர் பலரும் கொழும்பு நகரத்தில் வெள்ளவத்தை யென்னு மிடத்திலுள்ள இராமகிருட்டின மடத்திற் கூடியிருந்தார்கள். யாழ்ப்பாணம், திருக்கோண மலை, மட்டக்களப்பு, அநுராதபுரம் முதலிய இடங்களி லிருந்து அடிகளாருடைய நண்பர்களும், மாணவர்களும், பேரன்புமிக்க அறிஞர் பலரும் வந்திருந்தார்கள். வெண் ணிறப் பேழையில் காவியுடை யணிந்த தோற்றத்துடன் காணப்பெற்ற அடிகளார் திருமேனியைக் கண்டு மலர் தூவி வழிபட்டனர். தேவார திருவாசகச் செழும் பாடல்கள் அமைதி குறித்துப் பாடப் பெற்றன. அடிகளாரின் அரிய நண்பரும் கொழும்பிலுள்ள கல்வி மேற்பார்வையாளர் உதவித் தலைவரும் ஆகிய திருவாளர் K. S. அருணந்தி அவர்கள் கலங்கிய உள்ளத்துடன் தழுதழுத்த குரலில் அடிகளாரின் பெரு மாண்பினை எடுத்துரைத்து வருந்தி னார்கள். தமிழ்நாட்டி லிருந்து அங்குச் சென்றிருந்த

நாமக்கல் திரு. வெ. இராமலிங்கம்பிள்ளை அவர்களும் அடிக ளாரின் பிரிவு குறித்துத் தமிழகத்தாரது வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள். மாலை 6 மணிக்கு அடிக ளாரின் பூதவுடல் கோட்டைப் புகைவண்டி நிலையத்துக்கு ஊர்வலமாக எடுத்துச் செல்லப் பெற்றது. ஊர்வலத்திற் கலந்துகொண்ட பெருமக்கள் சிவபுராணத்தினை யோதி வந்தனர். கோட்டையிலிருந்து புறப்பட்ட புகைவண்டி மறுநாள் திங்கட்கிழமை காலை மட்டக்களப்புக்கு வந்து சேர்ந்தது. மட்டக்களப்புப் புகைவண்டி நிலையத்தில் மக்கள் பல்லாயிரவராக வந்து கூடிய காட்சி உள்ளத்தை யுருக்கும் நீர்மையது. வீதிகளிற் பூரண கும்பங்களும் தோரணங்களும் அணி செய்யப்பெற்றன. யாழ்ப்பாணத் திலுங் கொழும்பு முதலிய பிற விடங்களிலும் உள்ள அன்பர்கள் பலரும் சாதி சமய வேறுபாடின்றி வந்து கூடி னர். சிவபுராணம், பகவத்கீதை, குர்-ஆன், பௌத்தநூல் என்பவற்றின் பகுதிகள் அங்கு வழிபாடு குறித்துப் படிக் கப் பெற்றன. ஊர்வலத்தில் பட்டினத்திலுள்ள பதி னொன்கு பாடசாலை மாணவர்களும் ஆசிரியர்களும் அணி வகுத்து நின்றனர். நகரிலுள்ள கடைகளும் பிற நிலையங் களும் மூடப்பட்டன. நீதி மன்றம் போன்ற அரசினர் நிலையங்களும் வழக்கத்திற்கு முன்னதாகவே மூடப்பட் டன. அடிகளாரது சேமவுடற் பெட்டியின் முன்னும் பின்னும் இரண்டு மைல் நீளத்தில் அன்பர்களும் ஆசிரியர் களும் மாணவர்களும் தொடர்ந்துவர ஊர்வலம் விவேகா னந்த மண்டபத்திற்குச் சென்றது. அங்கு அணி செய்யப் பெற்ற மேடையில் அடிகளாரின் திருமேனியைக் கண்டு பலரும் கண்ணீருகுத்துக் கலங்கினர். பின்னர் அடிகளா ரின் பேரன்புக்குரிய நிலையமாகிய கல்லடி உப்போடைச் சிவானந்த வித்தியாலயத்தை நோக்கி மாலை 4 மணிக்கு ஊர்வலம் தொடங்கியது. சிவபுரி யென்னும் கட்டிடத் தில் ஒரு மணிநேரம் தங்கியபின்னர் சிவானந்த வித்தியா லயத்தில் விபுலாநந்த அடிகளார் தங்கியிருந்து அரும் பொருள்களை எடுத்துரைக்கும் ஆலமரத்தின்கீழ் மின் விளக்குகளால் அணி செய்யப் பெற்ற பூம்பந்தரில் அடிக ளார் திருமேனிக்குச் சிறப்புடை நீராட்டும் வழிபாடும் நிகழ்ந்தன. அடிகளார்பால் அன்புள்ள திரு. மா. பீதாம் பரம், டாக்டர் K. கணபதிப் பிள்ளை, நித்தியானந்தம், முதலியார் எம். எஸ். காரியப்பர், குருநேரு முதலிய அறி

ஞர்கள் தமிழிலும் சிங்களத்திலும் அடிகளார் பண்புகளைப் பாராட்டிப் போற்றினுர்கள். பண்டிதர் A. பெரியதம்பிப் பிள்ளை, பண்டிதர் V. S. கந்தையா ஆகியோர் அடிகளார் பிரிவினைக் குறித்துப் பாடிய பாடல்களைப் படித்தார்கள். சுவாமி சித்தாத்மானந்தரவர்கள் அடிகளாரது நல்லுயிர் திருவருளிற் கலந்து அமைதியுறுவது குறித்து வழிபாடு நிகழ்த்தினுர்கள். பின்பு அடிகளாரின் திருமேனி திருநீறு, கருப்பூரம் என்பவற்ருல் பொதியப்பெற்று அவ் வாலமரத் தின் அருகிலேயே சமாதியில் அடக்கஞ் செய்யப் பெற்றது. இலங்கையிலே பண்புமிக்க உயர் குடும்பத்திற் புகழொடும் தோன்றிக் கல்வியினுலும் தவத்தினுலும் புலமைத் தொண் டினுலும் இமயம் முதல் ஈழம் வரை தமிழ்த் தொண்டும் சமயத் தொண்டும் ஆற்றி இறையருளிற் கலந்த செந்தமிழ் முனிவர் அருள்மிகு விபுலாநந்த அடிகளார்க்குத் தமிழ் மக்கள் செய்யும் கைம்மாருவது அவ் வடிகளார் செய்து போந்த தமிழ்த் தொண்டுகளைத் தம் புலமை யுணர்வால் நிறைவேற்றிப் பயன்பெறுத லொன்றேயாகும்.

செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்றமிழிற் சீரிய கூரிய செஞ்சொற் கவிகளை யியற்றவல்ல தமிழ்ப்பெருங் கவிஞர் அருட்டிரு விபுலாநந்த அடிகளாராவர். வங்கமொழிப் புலவர் தாகூர் இயற்றிய இன்சுவைப் பாடல்களை இனிய தமிழ்ச் செய்யுட்களாக யாத்துச் செந்தமிழில் வெளியிட் டார்கள். மணிமலரில் வெளிவந்த ஆங்கிலவாணியும், இலக்குமி தோத்திரம், தில்லிநகர்க் கோயிலைப் பாடிய செழும் பாடல்கள், இராமகிருட்டினதேவர் வரலாற்றுப் பாயிரம், கங்கையி லெழுதியிட்ட ஓலை, ஓதீசிய எயினிய காப்பியச் செய்யுள், யாழ்நூலிலுள்ள நீரரமகளிர் இன் னிசைப் பாடல், கண்ணப்பரைப் போற்றிப் பாடிய செழும் பாடல், அழகிய நாச்சியார் நான்மணிமாலை என் பன முதலாக அடிகளா ரியற்றிய சுவைமிக்க செய்யுட்கள் யாவும் அவர்களது பாவன்மையை இனிது விளக்குவன வாம். அவர்க ளியற்றிய செய்யுட்களை ஒன்ருகத் தொகுத் துத் திருத்தமாக வெளியிடுதல் இன்றியமையாததாம். அவர்கள் செந்தமிழ், தமிழ்ப்பொழில், இராமகிருட்டின விஜயம், குமரன் முதலிய தமிழ் வெளியீடுகளில் எழுதிய அரிய வுரைகளும், வேதாந்தகேசரி, பிரபுத்தபாரதம் முத லிய ஆங்கில வெளியீடுகளில் வெளியிட்ட கட்டுரைகளும் அடிகளாரது நுண்மாணுழை புலனையும் உரைத் திறனை

யும் இனிது புலப்படுத்துவனவாகும். இவற்றையெல்லாம் நூல் வடிவில் வெளியிடுதல் கற்போர்க்குப் பெருநலம் பயப்பதாகும். இங்ஙனம் இயற்றமிழ்ப் பொருளுரைக ளுடன் நாடகத்தமிழ் நூலாகிய மதங்க சூளாமணியினையும் இசைத்தமிழ் நூலாகிய யாழ்நூலையும் அவர்கள் நம்மனோர் பொருட்டு ஆக்கி யளித்துள்ளமையினை யெண்ணும்போது அடிகளார் முத்தமிழ்த் துறையின் முறைபோய வித்தகர் என்பது இனிது விளங்கும். தமிழ் என்றால் இயல் இசை நாடகம் என்ற மூன்றையும் உணர்த்தும் எனச் சிலப்பதி கார உரையாசிரியர் கூறியதற்கேற்ப, தமிழாசிரியர் என் னும் பெயர் அம் மூன்று தமிழும் வல்லவர்களுக்கே உரிய தாகும் என அடிகளார் இயற்றமிழொன்றே வல்லவர்களை நோக்கி அடிக்கடி அறிவுறுத்துவார்கள். அவர்கள் கருதிய படி மூன்றுதமிழும் வல்ல தமிழாசிரியர் ஒருவர் உளரோ எனக் கேட்போர்க்குச் சிறிதுந் தயக்கமின்றி முத்தமிழ் வளர்த்த சேரமுனிவரே மீண்டும் இங்குப் பிறந்தருளினர் என்ன விளங்கும் எங்கள் விபுலாநந்த அடிகளார் இருக் கின்றார்கள் எனப் பெருமிதத்துடன் கூறிமகிழ்ந்தோம். அத்தகைய மகிழ்ச்சியை அடிகளாரது பிரிவு துடுமெனத் தோன்றி மறைத்து விட்டதே! அந்தோ! எம்மனோர் செயற்பாலது யாதுளது? அவர்கள் வாழ்க்கையில் மேற் கொண்ட நல்லறப் பண்புகளை யெல்லாம் தமிழர் மேற் கொண்டு பயன்பெறுவாராக என அடிகளாரது திருவடி களை யிறைஞ்சி அமைதிகொள்வோமாக.

---

# அருட்டிரு. விபுலாநந்த அடிகளார் பிரிவு குறித்துப் பாடிய

## கையறு நிலைச் செய்யுட்கள்.

வண்டமிழர் பெருவாழ்வே மாமுனிவர்க்
கொருதுணையே வாய்மை யாலே
கண்டெனநல் லுரையருளுங் கற்பகமே
கவியரசர் கருதிப் போற்றும்
பண்புடைய பெருமானே பழந்தமிழின்
னிசையாழைப் படைத்த கோவே
விண்படர்ந்தாய் யாம்வெதும்ப விபுலாநந்
தப்பெயர்கொள் விழுமி யோனே.

தென்னிலங்கைத் தீவகத்தே செந்தமிழர்
நன்மரபிற் றிகழ்ந்து தோன்றி
மன்னுமயில் வாகனப்பேர் வாய்ந்துதமிழ்
முகிலாகி வளர்ந்து வாய்மை
துன்னுகலைக் கடல்படிந்து விபுலாநந்
தப்பெயர்கொள் தூயோய் நீயின்
றின்னிசைதேர் யாழ்நூலை யெமக்களித்தாய்
மறைந்ததெவண் இயம்பி டாயே.

திருவாள னுயர்சாமித் தம்பியொடு
கண்ணம்மை செய்த நோன்பின்
உருவாய்த்தென் னிலங்கைமினிர் தமிழ்ஞாயி
றெனத்தோன்றி யுயர்ந்தாய் யார்க்கும்
வெருவாது பணிபுரியும் விபுலாநந்
தப்பெரியோய் வேட்கை நீக்கி
ஒருவாது தமிழ்வளர்த்தாய் ஒருவியெமைப்
பிரிந்துறைத லுவந்தாய் கொல்லோ.

பலகலையுங் கற்றுணர்ந்தே பரிவுடனற்
றிருத்தொண்டு படர்தல் மேவி
உலகியலை யறநீக்கி யொளிநெறியிற்
பணிபுரிந்த உரவோய் உண்மை
இலகவளர் முத்தமிழும் எழில்பெருக
வளர்த்தனைநீ இந்நா ளின்பம்
நிலவவருந் தமிழ்பரப்ப நீபடர்ந்த
புலமெதுவோ நெடிய செம்மால்.

நாவலந்தீ வொளிரவரும் அயோத்தியருந்
திறல்,துவரை நகர்மிக் கோங்கக்
காவலனாய் வந்தருளுங் கண்ணனெனு
மிவ்விருவர் கலந்தொன் றாகி
மேவினரென் றுலகிசைப்ப மெய்யுணர்வைப்
பரப்பியருள் விறலோற் போற்றித்
தாவில்தவ நிலைபெற்றாய் விபுலாநந்
தப்பெயரோய் தமிழர் வாழ்வே.

செழுங்கலைதேர் நியமமெனத் திகழண்ணா
　　மலைக்கழகம் சிறப்புற் றோங்க
ஒழுங்குபெறத் தமிழ்வளர்த்தாய் உன்னருமை
　　மாணவரு ளொருவ னானேன்
தொழுந்தகைமைத் தமிழ்ப்பேறே விண்படர்ந்தா
　　யெனக்கேட்டுத் துயரம் விஞ்ச
அழுங்குகின்றேன் என்னருமை ஆசிரியப்
　　பெருமானே அளியே னந்தோ.

தஞ்சைநகர்ச் சங்கத்தே தமிழவேள்
　　அடிவணங்கச் சார்ந்தே யன்பு
விஞ்சவளர் திருக்கயிலைச் செலவினைநீ
　　விரித்துரைத்த மேன்மை யெல்லா
நெஞ்சகத்தே கொண்டடியேம் நீன்கயிலை
　　கண்டதொரு நிலைய ரானேம்
செஞ்சொல்வளத் தமிழ்வளரச் சிவம்பெருக்கித்
　　திருக்கயிலை சேர்ந்த வேந்தே.

எழிசைநூற் றிறங்கண்டீர் யாழியலை
　　வகுத்தருள்மின் என்ன முன்னம்
ஆழியஅன் பினற்றமிழ வேள்புகல
　　அதற்கிசைந்தே அவன்காண் சங்கச்
சூழலிலே யாழ்நூலைத் தொடங்கியநின்
　　அன்புரிமைத் தொடர்பை யாண்டு
வாழுமவற் குரைத்திடவோ வளர்கயிலை
　　யடைந்தனைநீ வகுப்பா யண்ணல்.

தமிழரசாய் மிளிரவளர் புதுக்கோட்டை
　　நகர்தனிலே தழைக்கு மன்பின்
சிமிழெனுநற் சிந்தையான் சிதம்பரவேள்
　　உளம்போலத் திகழ்ந்தே ஆர்வங்
கமழவொளிர் தருராம நிலையமதே
　　தாய்வீடாக் கருதி யாங்கே
யமிழ்தெனநல் யாழ்நூலை யாக்கியிசை
　　வளர்த்தனைநீ யருளா ரண்ணல்.

திருக்கொள்ளம் பூதூரிற் செந்தமிழ
　　ருளமகிழத் தமிழர் யாழ்நல்
லுருக்கொள்ளக் கருவிபல வுணர்ந்தமைத்திக்
　　கறிஞரெலா முவந்து போற்ற
உருக்கமிக யாழ்நூலை யாங்கேற்றி
　　யுணர்த்தியஎம் உரவோய் இன்பங்
கருக்கொள்ளத் தமிழகத்தே கலைவளர்த்தாய்
　　தமிழ்நாட்டின் கணகண் ஆனாய்.

ஆங்கிலத்தில் நீவரைந்த அரும்பொருளைக்
கற்றுணர்ந்தோர் அண்ணல் நீயே
ஓங்குதமிழ்ச் சுவைமல்க ஆங்கிலத்தில்
மொழிபெயர்க்கும் உரவோ னென்றார்
பாங்குபெற யாழ்நூலை யாங்கிலத்தில்
வரைவனெனப் பகர்ந்தாய் காங்கள்
ஏங்கியுளந் தடுமாற இறையருளிற்
கலந்துமறைந் தின்புற் றுயால்.

நல்லறத்தி னுருவாகும் நாவலனே
நினதுதிரு மேனி கண்டோர்
சொல்லறத்தின் சிறங்கரிதே' வெனவுரைப்ப
நெடுமாலாய்த் திகழ்ந்தாய் தூயோய்
அல்லலெலாம் அகன்றொழிய 'அன்புள்ளதம்பி'
யென அழைப்பாய் அச்சொல்
செல்வமெனக் கொன்றிருந்தேன் தீவினையேன்
அதுகேட்குந் திருவற் றேனே.

பிறந்துமொழி பயின்றபின்னர்ப் பெரியோய்நீ
துறவுநிலைப் பெற்றி யெய்திச்
சிறந்தநெறி நின்றொளிரும் சிவம்பெருகத்
தவநிலையிற் றேர்ந்து கல்வித்
திறம்வளரத் தமிழ்த்தொண்டே செய்துயர்ந்தாய்
செந்தமிழர் சிறக்க வாழ்ந்தாய்
அறந்திகழப் பணிபுரிந்தாய் அறவாழி
யந்தணன்றாள் அடைந்தாய் நன்றே.

இயலிசைநா டகப்பொருள்சேர் சிலம்பதனை
யளித்தருளும் இளங்கோ வேந்தன்
மயர்வறமுத் தமிழ்பரப்ப விபுலாநந்
தப்பெரியோன் வடிவு கொண்டு
துயரறச்செந் தமிழ்வளர யாழ்நூலைத்
தொகுத்தளித்தான் மீட்டுந் தன்சீர்
அயர்வில்செழும் பேரின்பத் தினிதுறைந்தான்
அவன்பிரிவுக் கழுங்க லென்னே.

பாட்டெழுத வுரைவரையப் பழுதில்முதல்
நூல்வகுக்கப் பரிவோ டென்றும்
காட்டினலம் வளர்த்துயா நற்றவத்தின்
நிலைநின்ற நலமார் கேள்வி
வீட்டினிலை தெரிந்துரைக்க விபுலாநந்
தப்பெரியோன் மேலோர் நூலில்
நீட்டுமிலக் கியமாகித் திகழ்கின்றான்
அவன்புகழிற் றிளைத்து வாழ்வாம்.

க. வெள்ளைவாரணன்

கரந்தைத் தமிழ்ச்சங்கங் கண்டேன் புலவர்
விருந்தமுதம் உண்ண விழைந்தேன்—அருந்துயரால்
நெஞ்சடைக்கப் பட்டேன் நிபுணவிபு லாநந்தர்
எஞ்சாப் பிரிவுரைகேட் டே

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழியும் வியன்புலவன்—கேட்டான்
மறைந்தயாழ் நூலை மறுபடியுந் தந்து
மறைந்தவிபு லாநந்த மன்

மன்னனிற் கற்றோரே! மாசில் சிறப்புடையார்
என்னும் உரைக்கிங் கிலக்காகி—மன்னுமுயர்
கைலாய யாத்திரையுங் கண்டவிபு லாநந்தர்
கைலாயஞ் சென்றதெவன் காண்.

சுவாமி. அருணகிரிநாதன்,
அகத்திய குருகுலம் சாது நாராயணதேசிகர் நிலையம், சென்னை.

---

## இரங்கற் கூட்டம்

---

யாழ் நூலாசிரியரும் இலங்கைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியரும் ஆகிய அருட்டிரு. விபுலாநந்த அடிகளார் அவர்கள் கொழும்பு நகரத்தில் 19—7—47 இரவு ஒன்றேகால் மணிக்கு இறைவன் திருவடியிற் கலந்து மறைந்தார்கள் என்னுந் துயரச் செய்தி கேட்டுத் துயரத்தின் அறிவிப்பாகக் கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்வி நிலையங்கள் 23—7—47-ல் மூடப்பெற்றன. தமிழகம் பெருங் கலக்கமுற்றது. 23-7-47 மாலை 5 மணிக்குக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் தமிழ்ப் பெரு மன்றத்தில் அடிகளார் பிரிவு குறித்து இரங்கற் கூட்டம் நிகழ்ந்தது. அக் கூட்டத்தின் தலைவர் கரந்தைக் கவியரசு R. வேங்கடாசலம் பிள்ளை யவர்கள் யாழ் நூலாசிரியரவர்களின் புலமைத்திறத்தினையும் பெருந்தகைமையினையும் எடுத்துரைத்து வருந்தினார்கள். பின்னர் சங்க அமைச்சர் திரு. நீ. கந்தசாமி பிள்ளை அவர்கள் அருட்டிரு. அடிகளார் பிரிவினால் தமிழ் நாட்டிற்கு நேர்ந்த ஈடு செய்ய முடியாத பேரிழப்பினை எடுத்துரைத்து வருந்தினார்கள். அடிகளாரது பெருந்தகவினையும் தொண்டுகளையும் பாராட்டி அமைச்சரவர்கள் பின் வருமாறு குறிப்பிட்டார்கள்.

"அருட்டிரு. விபுலாநந்த அடிகளார் அவர்களை முப்ப தாண்டுகளுக்கு முன்னர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் முதன் முறையாகக் காணப்பெற்றேன். அப்பொழுது அவர்கள் துறவு நிலை மேற்கொள்ளாது பண்டித மயில்வாகனனார் என்னும் பெயருடன் வழங்கப்பெற்ற காலமாகும். அதுபோது அவர்கள் செந்தமிழில் வெளியிடுதற்குரிய அறிவியல் நூற் பொருளுரை களை எழுதுதற்பொருட்டு ஓரிடத்தில் தனியே அமர்ந்திருந்து இலத்தீன் மொழியிலுள்ள நூலொன்றினைப் படித்துக்கொண் டிருந்தார்கள். அவர்களது பல்கலைப் புலமையினையும் ஆர வாரமற்ற இயல்பினையுங் கண்டு வியந்தேன். 1929-ல் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தொடங்கப்பெற்றது. அதற் குரிய ஆட்சிக் குழுவில் நம் சங்கத் தலைவராகிய தமிழவே ளவர்களும் உறுப்பினராயிருந்தார்கள். தமிழுக்குப் பேரா சிரியராக யார் வர விருக்கின்றார்கள் என நம் தமிழவே ளவர்கள் வினவியதற்குச் செட்டிநாட்டரசர் திரு. அண்ணா மலைச் செட்டியாரவர்கள் "இராமகிருட்டின சங்கச் சார்பில் பணியாற்றிவரும் சுவாமி விபுலாநந்தரவர்களைத் தமிழ்ப் பேராசிரியராக வரும்படி வேண்டிக்கொண்டுள்ளோம். ஆங்கி லத்தில் இலண்டன் B.Sc. பட்டமும் தமிழில் மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதத் தேர்வும் பெற்றுச் சமயத்தொண்டும் தமிழ்த் தொண்டும் செய்து வருகிறார்களென்றும், அவர்கள் இப் பொழுது பெங்களூருக்குச் சென்றிருக்கிறார்களென்றும் அறிந்தோர் சொல்லக்கேட்டோம். அவர்கள் நம் வேண்டு கோளுக்கு இசைந்து இங்கு வருவார்களாயின் அது நமது தமிழ் வளர்ச்சிக்குப் பெருந் துணையாகும்" எனக் குறிப் பிட்டார்களாம். அதனைக் கேட்டுவந்த சங்கத் தலைவரவர்கள் இங்கு வந்து எங்களோடு பேசிக்கொண்டிருக்கும்பொழுது, அடிகளாரின் புலமைத்திறத்தினையும் சால்பினையும் பாராட்டி, இத்தகைய பெரியோரை நம் சங்கத்திற்கு அழைத்து வர வேண்டும் எனத் தெரிவித்தார்கள். பின்னர் அடிகளாரவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பகுதித் தலைவராகத் தமிழ்ப் பணிபுரியுங்கால் தமிழகமும் தமிழ் மொழியும் உயர் நிலைபெற வேண்டுமென்னும் உயர்ந்த நன்னோக்கத்துடன் நடு நிலை பிறழாது அச்சமின்றித் தமிழ்த்தொண்டாற்றினார்கள். அவர்களை யடைந்து நம் சங்க ஆண்டு விழாவிற்குத் தலைவராக வரும்படி வேண்டிக்கொண்டோம். அவர்களும் எங்கள் வேண்டுகோளுக்கு அன்புடனிசைந்து இங்குவந்தருளினார்கள். ஆண்டு விழா நிகழ்ச்சிகளைக் கால வரம்பு பிறழாதபடி நடத்தித் தருதல் வேண்டும் என அமைச்சன் என்ற முறையில் அடிகளாரை வேண்டிக்கொண்டேன். அதுவே செயற்பாலது

என அவர்களும் வற்புறுத்தினார்கள். அவ்வாறே காலவரம்பில் தாமும் நின்று ஏனையோரையும் நிற்கப் பணித்தார்கள். அடிகளார் தலைமையுரை பண்டைத் தமிழர்கண்ட இசைத் தமிழ் நுட்பத்தினைப் பொருளாகக்கொண்டு நிகழ்ந்தது. இயற் றமிழ், இசைத்தமிழ், கணிதம், அறிவியல் நூல் எனப் பல துறையிலும் புகுந்து ஆராய்ந்ததன் பயனாக அடிகளார் தாம் கண்ட விழுமிய ஆராய்ச்சி முடிபுகளை இழுமென் மொழியால் எடுத்துரைக்குங்கால் அவையினரனைவரும் சித்திரப்பாவை யின் அசையாது கேட்டிருந்து வியந்து 'இவ்வரிய நுண் பொருளைத் தமிழகம் உணருங்காலம் அண்மையில் வர வேண்டும்' என ஆர்வமீதூரப்பெற்றனர். இயலிசைப் புலமையிற் சிறந்த நம் சங்கப் பேரன்பர் திரு. இராமசாமி வன்னியரவர்கள், அடிகளார் கூறிய இசை நூன் முடிபுகளைக் கேட்டு மகிழ்ந்து 'இயலிசைத் துறையில் யான் பெற்ற புலமையினைத் துணையாகக்கொண்டு அடிகளார் சொற்பொழி வின் பொருட் கூறுகளை ஓரளவு தொடர்ந்து சென்றேன். அடிகளார் கூறும் கருத்துக்கள் யாவும் இசைத்துறைக்குப் பொருந்தியனவாகவும் நுட்பமுடையனவாகவும் புலப்பட்டன. இத்தகைய ஆராய்ச்சி பிறரெவராலும் மேற்கொள்ளுதற்கு எளிய தொன்றன்றாம். இதனை எளிதின் மேற்கொள்ள வியன்றமைக்கு அடிகளாரது பல்கலைப் புலமையே காரண மாகும். அதனால் நம் அடிகளாரவர்களைத் தமிழகத்தின் தவப்பேறென்றே சொல்லவேண்டும்' என உவகையுடன் பாராட்டிப் போற்றினார்கள்.

'வரம்புடன் நிற்றல் வேண்டும்' என்னுங் கடமையினை அடிகளார் தமது சிறந்த குறிக்கோளாகக் கொண்டிருந் தார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலே பணி மேற்கொண்ட அடிகளாரவர்கள், தமது துறவுநிலைப் பெருந் திறலுக்கேற்ப வீற்றிருந்து தொண்டாற்றிய சீர்த்தியினைத் தமிழகம் நன்குணரும். இராமகிருட்டின சங்கச் சார்பில் ஈழத்திலே அடிகளார் புரிந்த கல்வித் தொண்டுகள் அவர்களது பெருக்கத்தினை விளக்குவன. திருக்கயிலை சென்று இறைவன் திருவருளிற் றிளைத்த அடிகளார் அவர்கள் தாம் கண்ட கயிலைக் காட்சியினை நம் சங்கத் தமிழ்ப் பெரு மன்றத்தில் எடுத்துரைத்த காலத்து அதனைக் கேட்டோர் அனைவரும் திருக்கயிலை சென்று அவ்வழகிய காட்சியில் தாமும் ஈடுபட் டிருப்பதாகவே எண்ணி மகிழ்ந்தார்கள். ஆங்கிலத்திலும் தமிழிலும் செய்யுட் சுவை நலங்களைத் தேர்ந்துரைக்கும் அடிகளாரது பெரும் புலமையினை மணிமலரில் வெளிவந்த

ஆங்கிலவாணி யென்னும் உரையிடையிட்ட பாடல்களால் உணரலாம். வங்காளத்தில் இரவீந்திரநாத தாகூர் என்னும் பெரும் புலவர் இயற்றிய செழும் பாடல்களின் மொழி பெயர்ப்பாக அடிகளார் செந்தமிழில் வெளியிட்ட செய்யுட்கள், அவர்களது கவித்திறத்தினை இனிது புலப்படுத்துகின்றன. தமிழும் ஆங்கிலமும் எனு மிருமொழிப் புலமையும் ஒருங் கெய்தி, எண்ணூல், பூதநூல், வேதிநூல் முதலிய அறிவியற் றுறைகளில் நிரம்பிய புலமைபெற்று, வடமொழி இலக்கண மென்பவற்றிலும் போதிய பயிற்சி யடைந்து இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழையும் வளர்த்த பெருமை நம் அடிகளார் ஒருவர்க்கே சிறப்பாக வுரியதாகும். சுருங்கக் கூறின் அடிகளாரவர்களை இயங்குஞ் செழுங்கலை நியமம் எனக் கூறலாம். தமிழின் ஒலியமைப்பு முறைபற்றியும் பிற கலை நலங்களைப்பற்றியும் அடிகளாரவர்கள் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்ட கட்டுரைகள் அவர்களது நுண்மாணுழை புலனை நன்கு புலப்படுத்துவனவாம். தமிழ்ப்பொழில், செந்தமிழ் முதலிய தமிழிதழ்களில் இவர்கள் வெளியிட்ட பொருளுரை கள் பலவும் இவர்களது தனித்த ஆராய்ச்சித் திறனைக் குறிப் பிடுவனவாம். ஆங்கில மொழிப் பெரும் புலவர் செகப்பிரியரது நாடக அமைதியினை நன்குணர்ந்து இவர்களியற்றிய மதங்க சூளாமணி யென்னும் நாடகத் தமிழ்நூல் யாவரும் உணர்ந்து பயிலத்தகுஞ் சிறப்புடையதாகும். அடிகளார் பதினன் காண்டுகளாக அரிதின் ஆராய்ந்தியற்றிய யாழ் நூற் பொருளினைத் திருக்கொள்ளம்பூதூரில் நிகழ்ந்த அரங்கேற்று விழாவில் அடிகளாரவர்களே எடுத்துரைக்கக் கேட்டு இசைப் புலவர்களும் இயற்புலவர்களும் பெரிதும் பாராட்டிப் போற்றி னர்கள். இவ் யாழ் நூல் அரங்கேற்றத்தால் தமிழகம் அடைந்த பெருமகிழ்ச்சிக்கு அளவில்லை. இங்ஙனம் நம்ம னோர்க்குத் தம் புலமைத் திருத்தொண்டினால் மகிழ்வளித்த அடிகளாரவர்கள், இவ்வளவு விரைவில் நம்மை விட்டுப் பிரிந்து இறைவன் திருவடியிற் கலந்து மறைந்தார்களே யெனத் தமிழகம் அடையும் பெருந் துயருக்கும் ஓரெல்லை யில்லை. என் செய்யலாம். தமிழரது தவம் இவ்வளவே பயன் தந்தது. நம் தமிழவேளவர்கள் வடநாடு சென்று இறைவன் திருவடியிற் கலந்து மறைந்த கடுந்துயர் கேட்டு அருட்டிரு. அடிகளார் கூறிய இரங்கல் மொழி நமது நினைவுக்கு வருகின்றது.

எல்லாப்பற்றையும் நீங்கி இறைவன் திருவருளிலேயே நினைவினைப் பயிற்றும் துறவு நிலை யெய்திய நம் அடிகளா

ரவர்கள் தமிழ்த்தொண்டே இறைவன் தொண்டென உறுதியாக எண்ணி நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பி வந்தார்கள். கல்வியிற் பெரிய அவர்களது பிரிவால் நாம் கண்ணீருகுத்துக் கலங்கத் திடீரெனத் திருவருளிற் கலந்து மறைந்தார்கள். இறையருளிற் றிளைத்து மகிழும் அடிகளாரவர்கள் நம்மனோர் உள்ளத்திற்கு ஆறுதலளித்துத் தமிழ் வளம்பேணித் தமிழர்களை வாழ்விப்பார்களாக என அவர்கள் திருவடிகளை யிறைஞ்சி யமைதிபெறுவோமாக" என்பதாம்.

பின்னர் அடிகளாரின் மாணவர்களாகிய திரு. சு. வெள்ளை வாரணனார், திரு. மு. சடகோபராமாநுசம் பிள்ளை ஆகியவர்களும் சென்னை அருட்டிரு. சுவாமி அருணகிரிநாதரவர்களும் திரு. P. S. வேங்கடகிருட்டின பிள்ளை அவர்களும, கும்பகோணம், இசையறிஞர் சுந்தரேசம் பிள்ளை அவர்களும் அடிகளாரின் சால்பினையும் தமிழ்த்தொண்டினையும் புலமைத்திறனையும் பெருந்தவப் பெற்றியினையும் எடுத்துரைத்து வருந்தினார்கள்.

பின்னர் இறைவன் திருவருளிற்றிளைத்து மகிழும் அடிகளார்க்கு அமைதியுடன் வணக்கஞ் செலுத்தும் முறையில் எல்லோரும் எழுந்து நின்று இறைஞ்ச இரங்கற் கூட்டம் முடிவுபெற்றது.

---

### ஈசனுவக்கும் இன்மலர்கள்

வெள்ளைநிற மல்லிகையோ வேறெந்த மாமலரோ
வள்ள லடியிணைக்கு வாய்த்த மலரெதுவோ?
வெள்ளைநிறப் பூவுமல்ல வேறெந்த மலருமல்ல
உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது.

காப்பவிழ்ந்த தாமரையோ கழுநீர் மலர்த்தொடையோ
மாப்பிளையாய் வந்தவர்க்கு வாய்த்த மலரெதுவோ?
காப்பவிழ்ந்த மலருமல்லக் கழுநீர்த் தொடையுமல்லக்
கூப்பியகைக் காந்தளடி கோமகனார் வேண்டுவது.

பாட்டளிசோர் பொற்கொன்றையோ பாரிலில்லாக் கற்பகமோ
வாட்ட முறாதவர்க்கு வாய்த்த மலரெதுவோ?
பாட்டளிசேர் கொன்றையல்லப் பாரிலில்லாப் பூவுமல்ல
நாட்டவிழி நெய்தலடி நாயகனார் வேண்டுவது.

—சுவாமி விபுலாநந்தர்.

# பிரிவு

## திரு. நாராயணய்யங்கார் அவர்கள்

திரு. அய்யங்கார் அவர்கள், மதுரைத் தமிழ்ச்சங்கம் தோன்றிய காலம் தொடங்கித் தலைமை ஆசிரியப் பணியைத் திறம்பட நடத்தி வந்துள்ளார்கள். அளவை நூல் வல்லவர். மணிமேகலையின் பின் நான்குகாதை, திருக்குறள், சேனுவரையம் ஆகிய நூல்களை மிக்க திறம்படப் பாடம் சொல்வார்கள். அவர்கள்பால் பயின்று மிக்க திறமையுடன் வெளியேறிய மாணவர்கள் பலராவர். "செந்தமிழ்" என்னும் திங்கள் வெளியீட்டிற்குப் பல்லாண்டுகள் ஆசிரியராக இருந்து நடத்தி வந்திருக்கிருர்கள். அதன் வாயிலாக அவர்கள் எழுதிய கட்டுரைகள் மிகப் பலவாம். அவர்கள் கட்டுரை எழுதும் முறை ஒரு தனிச் சிறப்பெய்தி நிற்கும். அளவை நூல் வல்லார் என்பதை அக்கட்டுரைகள் புலப்படுத்தும். இத்தகைய பெரியார் திருநாடலங்கரித்தமை தமிழுலகிற்குப் பேரிழப்பாம். என் செய்யலாம். எத்தகைய பெரியசரையும் காலங்கவர்ந்து செல்கின்றது. நம்மை விட்டுப் பிரிந்த அப் பெரியார் உயிர் திருமாலின் திருவடி நிழலில் எய்தி நிற்கும் படியாக இறையை வணங்குகிருேம். இப்பெரியாரைப் பிரிந்த அவர்கள் திருப்புதல்வர்கட்கும் மற்றையோருக்கும் ஆறுதலளிக்கும் வண்ணம் இறையை வேண்டுகிருேம். இவர்கள் பிரிவைக் குறித்துக் கரந்தைத் தமிழ்ச்சங்கப் பெருமன்றத்தில் 4—8—47 ஆம் நாள் ஒரு இரங்கற் கூட்டம் கூட்டினுர்கள். அக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய கவியரசு திரு. R. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள், திரு. அய்யங்கார் அவர்களைப் பற்றிச் சிறப்பித்துக்கூற எல்லாரும் எழுந்துநின்று வணக்கம் கூறி அவர்களை நினைந்து சில கணம் அமைதியாயிருந்து கூட்டம் நிறைவுற்றது.

# இந்திய உரிமைத் திருநாள்

நாடொப்பன செய் என்றபடி இந்நாள் நன்னாளாகக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாரால் கொண்டாடப் பெற்றது. இராதாகிருட்டின தொடக்கப் பள்ளி, உமாமகேசுவர நடுத்தரப் பள்ளி, கரந்தை புலவர் கல்லூரி மாணவர்கள் எல்லாரும் ஒருங்கு குழுமி அணிவகுத்து ஊர்வலமாகவந்தார்கள். அணி வகுத்துச் சென்றது, நாட்டுப்பாடல்களை இனிய குரலால் பாடியது ஆகியவை மிக்க அழகாக இருந்தன. ஊர்வலமாக வந்த மாணவர்கள் ஒன்பது மணிக்கு சங்கத்துள் வந்து அணியணியாக அழகாக நின்றார்கள். இவர்கள் நடுவில் அமைக்கப்பெற்றிருந்த தமிழ்க் கொடியையும், நாட்டுக் கொடியையும் முத்தமிழ் வள்ளல் இராவ் பகதூர் திரு. A. Y. அருளானந்தசாமி நாடார் அவர்கள் ஏற்றினார்கள். கொடிவணக்கமும், தமிழ்த்தாய் வாழ்த்தும் நிகழ்ந்தன. தமிழ்க் கொடியைப்பற்றிக் கரந்தைக் கவியரசு திரு. R. வேங்கடாசலம் பிள்ளை அவர்களும், நாட்டு விடுதலையைப்பற்றி நடுத்தரப் பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. V. சீராமுலு நாயுடு அவர்கள், B. A., L. T., யும் பேசினார்கள். கனம் கல்வி அமைச்சர் அவர்கள் விடுத்த அறிக்கையைத் தொடக்கப்பள்ளி தலைமை ஆசிரியர் திரு M. இராமகிருட்டின பிள்ளை அவர்கள் படித்தார்கள்.

அரசியலார் உதவிய இனிப்புப் பொருள்களைத் தொடக்கப்பள்ளி மாணவர்க்குத் திரு. நாடார் அவர்களும், நடுத்தரப் பள்ளி, புலவர் கல்லூரி மாணவர்கட்குத் திரு. சிவ. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும் வழங்கினார்கள். கரந்தை வாணிபச் செல்வர் திரு. நா. லெ. வரதராச நாயுடு அவர்களும் இனிப்புப் பொருள் வாங்கிச் சங்க மாணவர்க்கு உதவினார்கள். நண்பகல் உணவுப் பொருள்கள் திரு. கோ. இராமாநுசதாசர் அவர்களால் வழங்கப் பெற்றன. மாணவர்கள் உண்டு மகிழ்ந்தார்கள். இப் பெருந் தகையார்க்குச் சங்கத்தின் நன்றி உரியதாகும்.

---

## கல்லூரி

மாணவர் பலர் பயில்வதற்குரிய வசதியை உன்னிச் சென்னைப் பல்கலைக் கழகத்தார், கல்லூரிக்கு வேண்டும் சில கட்டுப் பாடுகளைச் சிறிது தளர்த்திக் கொடுத்தார்கள். அதனைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டிக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் முயற்சி எடுத்து ஆவனவற்றைச் செய்யத் தொடங்கினார்கள். இந்நிலையில் தஞ்சைமா வட்டத்தார் தாங்கள் ஒரு கல்லூரி அமைப்பதென முடிவுசெய்து அரசியலார்க்கு விண்ணப்பம் செய்தனர், மாவட்டத்தார் கொடுத்த விண்ணப்பத்தை அரசியலார் மறுத்துவிட்டதாக அறிகின்றோம். ஆதலால் கிடைத்த நன்மையைப் பயன்படுத்திக் கொள்வான் பின்னரும் தம் முயற்சியை விடாது தொடர்ந்து நடத்துவதெனச் சங்கத்தார் உறுதி கொண்டுள்ளனர். சென்னை திருவொற்றியூர் திருப்பணிச்செல்வர், த. ப. இராமசாமிப்பிள்ளை அவர்கள் கல்லூரிக்கு வேண்டும் கட்டிடம் முழுவதையும் அமைத்துக் கொடுப்பதென வாக்களித்துள்ளார். அங்ஙனமே சில பேரன்பர்களும் தஞ்சையில் ஒரு கல்லூரி இருக்க வேண்டிய இன்றியமையாமையை ஒப்புக்கொண்டு பொருளுதவ முன் வந்துள்ளார்கள். ஆதலால் ஏனைய பெருநிலக் கிழவர்களும், பெரும் பொருள் வணிகர்களும் முன்வந்து ஆவனபுரியுமாறு வேண்டிக்கொள்கிறேன்.

---

## ஆராய்ச்சிக் குழு.

தமிழன்பர் பலர் கருத்தை யொட்டிப், பொழிலாசிரியர் செய்துகொண்ட வேண்டுகோளை ஏற்றுச், சங்க உறுப்பினர் சிலர், 10—8—47, ஞாயிற்றுக் கிழமை மாலை 4 மணிக்குக், கூடி ஒரு சிறு ஆராய்ச்சிக் குழு அமைத்துக் கொண்டனர்.

2. அக்குழுவினர் (அ) பிறமொழிச் சொற்களுக்கேற்ற தமிழ்ச் சொற்களை ஆக்குதல்,

(ஆ) தமிழ் மொழிச் சார்பான பிற ஆராய்ச்சிகளைச் செய்தல்,

ஆய இச்செயல்களை முதற்கண் தொடங்குவதெனக் கருதி, ஒப்பினர்.

3. இக் கருத்துக்களை, இக் குழுவின் உறுப்பினரும் பிறரும் குறிப்பிடும் சொற்களையும் பொருள்களையும் குழுவினர் அவ்வப்

போது கூடி ஆராய்ந்து, முடிந்தவற்றைத் தமிழுலகப் பேரறிஞர் ஆராய்ச்சிக்குக் கொணர்ந்து, தக்காங்கு முடிவுசெய்து கொள்ளும் முறையில் செயலாற்றுவதென முடிவு செய்தனர்.

*4.* இத்துறையில் தமிழன்பர்கள் துணைநின்று உதவி புரிவார்கள் என்று நம்புகிறோம்.

*5. 31—8—47* ஞாயிற்றுக் கிழமை மாலை 4 மணிக்கு நடக்கவிருக்கும் குழுக் கூட்டத்தில் கீழ்க்காணுமாறுள்ள சொற்கள் ஆராயப்பெற விருக்கின்றன.

(அ) அடியிற் காணும் ஆங்கிலச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைக் காண்டல்.

1. Independence
   Liberty
   Freedom
2. Thought
   Idea
   Opinion
   Conviction
   Supposition
   Persumption
   Assumption
3. See
   Look
   Observe
   Examine
   Research
4. Reason
   Rational
5. Sentiment
   Sentimentaility

(ஆ) அடியிற் காணும் சொற்கள் போன்றனவற்றின் பொருள் வேற்றுமைகளைக் காணல்.

சொல்லல்
இயம்பல்
பகரல்
நுவலல்
புகலல்
கூறல்
அறைதல்
மொழிதல்

## "தமிழர் நாடு"

"தமிழர் நாடு" கைவரப் பெற்றோம். பேறளித்த இறைவன் திருவருளை வழுத்துகின்றோம். முதலிதழ் முதற் பொன் மொழிகளைப் பிறிதோரிடத்தில் தந்திருக்கின்றோம்.

---

உலகில் மிகப் பழமையான நாடு தமிழ்நாடு. உலகில் முதல் முதலாக மக்கள் தோன்றிய நாடு தமிழ்நாடு. உலகுக்கு நாகரீகம் கற்றுக்கொடுத்தது தமிழ்நாடு. உலக முழுதும் திசையறிந்து கப்பல் ஓட்டும் ஆற்றலை இரண்டாயிரத்தி ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பே பெற்றது தமிழ்நாடு. மூவாயிரம ஆண்டுகளுக்கு முன்பே இலக்கண வரம்பைப் பெற்ற மொழியையுடையது தமிழ்நாடு. இன்றுள்ள பிறநாட்டு, பிறமொழி அறிவரும் வியந்து போற்றுமாறு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நல்வழி, நன்னெறி, நல்லொழுக்கம் ஆகிய முப்பால் நூலை வள்ளுவரின் வழியே பெற்றது தமிழ் நாடு. ஒன்றே குலமும், ஒருவனே தேவனும் என்று முன்னே மொழிந்து முதன்மைபெற்றது தமிழ்நாடு. யாதும் ஊரே; யாவரும் கேளிர் என்ற பொது உடமைக்கொள்கையைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பகர்ந்தது தமிழ்நாடு. பல படக் கூறுவானேன்? அன்பு தவழ்ந்து, அறம் பெருகி, உண்மை விளம்பி, உழைப்பு வலுத்து, விளைவு மிகுந்து, வணிகம் சிறந்து, வீரம் செறிந்து அரசு நிலைத்த நாடு தமிழ் நாடு.

—தமிழர் நாடு, 17—8—47

---

வாழி பகலோன் வளரொளிசேர் ஞாலமெலாம்
ஆழி செலுத்துதமிழ் அன்னையே!—வாழியரோ
நங்கள் கூரந்தைத் தமிழ்ச் சங்கம் நாளும்
அங்கம் தழைக்க அமைந்து!

---